உ

# திருநெல்வேலி
# திரு. நெல்லையப்பர் காந்திமதி தேவஸ்தான வரலாறு.



நந்தி—மாக்காளை

உ

# திருநெல்வேலி
# திரு. நெல்லையப்பர் காந்திமதி தேவஸ்தான வரலாறு.





எழுதியவர்:

வித்துவான்

திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கள்,
தலைமைத் தமிழ்ப் பேராசிரியர்,
அர்ச். சவேரியர் கல்லூரி, பாளையங்கோட்டை.





வெளியிடுவோர்:

திரு. V. சுந்தரராஜன், பி. ஏ., பி. எல்.,
தேவஸ்தான எக்ஸிகியூட்டிவ் ஆபீஸர்,
திருநெல்வேலி.



தேவஸ்தான வெளியீடு

1951

32/1

## பொருளடக்கம்.





## தனிப்படங்கள்.

# பதிப்புரை.

சென்னை, இந்துமத அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர், திருவாளர் ராவ்பகதூர் C.M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் பி. ஏ., பி. எல், கடந்த ஆண்டு எல்லா அறநிலையங்களுக்கும் பிறப்பிவித்த சுற்றறிக்கைக்கிணங்கத் திருநெல்வேலி திரு. நெல்லையப்பர் காந்திமதி தேவஸ்தான வரலாறு எழுதப்பெறுவதாயிற்று. இதனை எழுதியுதவியவர்; பாளையங்கோட்டை, அர்ச். சவேரியர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர், வித்துவான் திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கள். இவர்கள், வரலாற்றுக்கு வேண்டிய பகுதிகளைப் போதியவாறு ஆராய்ந்து எவரும் படித்தறியத் தக்க நடையில் எழுதியிருக்கிறார்கள். இவர்கள் எழுதி முடித்த கையெழுத்துப்படி; ஆணையாளர் திரு. இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் பார்த்து ஒப்புக்கொடுத்தபின், அச்சிடப்பெறுவதாயிற்று. சுருங்கிய பக்கங்களில், நிதானமான குறைந்த விலையில் எவரும் படித்துத் தெரியத்தக்க வரலாற்றுப் பொருளைக்கொண்டு வெளிவரும் இச்சிறு வரலாறு தமிழ் நாட்டின் பண்டை வரலாறு நாகரீகம் முதலியவற்றை விளக்க எழுதப்பெறும் பெருவரலாற்று நூலுக்கு ஒரு பீடிகையாகும்.

இக்கோயிலின் அமைப்புப்படம்: சிறிய வடிவிற்பெருகிய பல பொருள்களையும் விளக்க இருப்பினும், புத்தகத்தில் அச்சிட்டிருக்கும், ஊஞ்சல் மண்டபம், தாம்பிரசபை, சுவாமி கோயில் வாயிற் சிற்பமும் பெரிய கொடி மரமும், மாக்காளை இவற்றின் படங்கள் ஆலய அமைப்பிலமைந்த சிற்பச்சிறப்பை நன்கு விளக்குவனவாம்.

இவ்வரலாற்றை எழுதிய முதலியார் அவர்களுக்கும், அன்புகூர்ந்து பார்த்துதவி அச்சிட ஆணையிட்டருளிய அறநிலையப் பாதுகாப்பு ஆணையாளர் திரு. C. M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்களுக்கும், என் மனமார்ந்த நன்றியை அன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

திருநெல்வேலி }
20—10—42 }

R. மோகன்ரங்கையா நாயுடு, பி. ஏ, பி எல்.
எக்ஸிகியூட்டிவ் ஆபீஸர்

# நான்முகம்.

திருநெறிச் செல்வர்காள்,

எண்ணறிய பிறவியாம் மக்கட் பிறவி யெய்தினர், தம்மையும் தலைவனையும் உணர்ந்து வழிபட்டு, ஈறிலாப்பேரின்ப வாழ்வு எய்தல் முறை. எள்ளில் நெய், இந்தனத்து எரி, மலரில் மணம்போல் இறை எங்கும் நிறைபொருளாயினும், நடமாடுங் கோயிலாம் அன்பர் உளத்தும் அவ்வன்பர்கள் வழிபடும் ஆலயத்தும் சிறப்பாய் அமர்ந் திருப்பன. இவ்வழிபாடுபற்றி "மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந் தானும் அரனெனத் தொழுமே"என் றருளினர் மெய்கண்டார். ஔவையாரும் "ஆலயந் தொழுவது சாலவு நன்று" என்பர். அப்பரும் "திருக்கோயில் இல்லா ஊர் திரு இல் ஊர்" என்றும் "கறைக்கண்டனுறை கோயில் கோலக் கோபுரக் கோகரணம்" சூழ்தலே கால்களின் பயனென்றும் கூறுவர்.

இவ்வுண்மை நெறியுணர்ந்த பண்டைத் தமிழ் மன்னர்; திருக் கோயில்கள் அமைத்து அவற்றில் வழிபடுவோர்க்கு வேண்டும் சிறப்புப்பொருள்கள் முதலியனவுதவி, செந்நெறிப்படுத்தியுள்ளார்கள் இது நம் துரைத்தனத்தார் அரை நூற்றூண்டுக்கு மேலாக அரிய முயற்சியிற் கண்டு படிஎடுத்து வெளியிட்டுவரும் தென்னிந்திய சாசனத் தொகுதிகளால் விளங்கும்.

மேற்குறித்த கோயில்களில் சூலக்செங்கையார் தலம் இருநூற் றெழுபத்துநான்கு; மூவர் அருண்மொழி பெற்றவை. இவற்றுள் ஈரேழு பாண்டி நாட்டுள் இயைந்தவை. இவை,

"கூடல் புனல்வாயில் குற்றாலம் ஆப்பனூர்
ஏடகம் நெல்வேலி இராமேசம்—ஆடானை
தென்பரங்குன் றம்சுழியல் தென்திருப்புத் தூர்காளை
வன்கொடுங்குன் றம்பூ வணம்."

என்ற பாடலால் நன்கு விளங்கும். இப்பதினன்குள் ஒன்றாயிலங்கும் திருநெல்வேலித் தலைநகரில் திருநெல்வேலியுடையார், (நெல்லை யப்பர்) திருக்காமக்கோட்டமுடைய நாச்சியார், (காந்திமதி) எழுந் தருளியிருக்குங் திருக்கோயில் வரலாறு; சிறு நூலாக எவரும் படித்துணர்ந்து வழிபட்டு இன்புறும் முறையில் வெளிப்படுத்த வேண்டுமென்று, சென்னை இந்துமத அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர் சைவத் திருவாளர் ராவ் பகதூர் கோவை ம. ராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் பி. ஏ. பி. எல்., சுற்றறிக்கை மூலம் ஆணையிட்டமைக் கிணங்க எழுதப்படுவதாயிற்று.

இவ்வரலாற்றை ஆணையாளர் விருப்பிற்கிணங்கி எழுத இசைந்த யான்: தலம், மூர்த்தி, தீர்த்தம் ஆகிய மூன்றிலும் சிறந்து விளங்கும் இக்கோயிலின் பெருமையை உள்ளவாறு உணர்ந்து இந்நூலின் 32-ம் பக்கத்துக் காணப்படும் நூல்களை ஒருமதிக்குமேல் இருமதி நுணுகி யாராய்ந்து பெருமதிபெற எழுதி முடித்தனன். பின்னர் இதன் கையெழுத்துப்படி திரு. C. M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்களால் பார்த்து ஒப்புக்கொள்ளப்பட்டபின், அச்சிடப்பெறுவ தாயிற்று. அச்சிடுங் காலத்துக் கிடைக்கப்பெற்ற தென்னிந்திய சாசனத் தொகுதி 5, மேற்படி கல் வெட்டு 1927 அறிக்கை இவற்றைப் பார்வையிட்டதில் கண்ட உண்மைகள் பல. அவற்றைச் சமயம் வாய்த்துழி, தனி ஆராய்ச்சி நூலாக வெளியிடுதல் தகும்.

படத்திற் காணப்படும் இக்கோயிலமைப்பு முறை, முதலில் அமைத்த முழுதுகண்ட ராமபாண்டியன் காலத்தும், பின்னர் நின்ற சீர்நெடுமாறன் காலத்தும் இருந்த அமைப்பிலும் விரிந்தமைக்கப் பெற்றிருக்கிறது. சுவாமி கோவில் மணி மண்டபம் (சோபான மண்டபம்) கொல்லம் 721-ல் ஆண்ட ஜயதுங்கநாட்டு வென்றுமண் கொண்ட பூதல வீர சங்கிலி வீரமார்த்தாண்ட வர்மன் (சிறைவாய் மூத்தவர்) திருப்பணியாக அறுபத்துநான்குகால் ஒவ்வொன்றிலும் பிரிந்து அற்புதமாய்ப் பல ஓசையுடன் விளங்கும் ஒரே கற்கோடித் தூண்கள் சில அமைத்து அழகுபடுத்தியுள்ளார். அப்பொழுது விளங் கிய வடக்குரதவீதி சேக்கிழார் மடத்துச் சிவபாதசேகரன் என்ற திருப்பணியாண்டாரும் மேலரதவீதிச் செங்கோல்மடம் சத்திய மெய்ஞ்ஞான தரிசிகளின் மாணவரும் சேர்ந்து தெரிவித்ததின் பயனாக, தாம்பிரசபைப் பத்தி தென்பிரகாரத்தில் அமைந்திருக்கின்ற மெய்யடியார் அறுபத்துமூவர், தொகையடியார் ஒன்பதின்மர்உடைய செப்புருவங்கள் அமைத்துப் பூசை; விழா முதலியன நடப்பதற்கும் திருக்கல்யாணம் முதலிய விழாக் காலங்களில் வீதி எழுந்திருத்துச் செய்வதற்கும் ஏற்பாடு செய்து வந்ததாகவும் தெரிகிறது.

இந்நகர் எல்லையுள் திருநாவுக்கரசு நாயனார் மடம், காஞ்சிபுர மடம், கூபம் சிவமடம், திருஞானசம்பந்தர் மடம், வேம்பத்தூர மடம் ஈசான மடம், செங்கோல் மடம், மேல மடம், சேக்கிழார் மடம், உமையொருபாக மடம், மாணிக்கவாசகர் சத்திரம், கண்ணப்பர் மடம் முதலிய பல சத்திரங்களும் திருமடங்களும் இருக்கின்றன.

இக்கோயில் அமுதுபடி சாத்துப்படி நந்தவனம் விளக்கு முதலிய வகைக்கு, கி. பி. பத்தாம் நூற்றுண்டுமுதல் விளங்கிய

மூவேந்தரும், வேளிரும், பிற அன்பரும் செய்து தந்திருக்கும் சாசனங்கள் எண்ணிறந்தன.

இத்தகைய சிறப்புவாய்ந்த கோயில் வரலாற்றைத் தலபுராணம் சீமைச்சரித்திரம் முதலியவற்றோடு ஆராய்ந்து எழுதுதற்குவேண்டும் நூல்களை அவ்வப்பொழுது உதவி இவ்விறைபணி நிறைவேறச் செய்தவர், தேஸ்தான எக்ஸிகியூட்டிவ் ஆபீஸர் திருவாளர் R. மோகன்ரங்கையா நாயுடு பி. ஏ., பி. எல்., அவர்கள். இவர்கள், இக்கோயில் நிருவாகப் பொறுப்பை ஏற்றநாள் முதல் வேண்டும் திருப்பணிகள் செய்தும், விழாக்காலங்களில் தக்கார் சொற்பொழி வாற்றுவித்தும், வழிபாடிகட்கு வேண்டுவன புரிந்தும் எவர்க்கும் மகிழ்வூட்டி வருவது பாராட்டத்தக்கது.

இவ்வரலாற்றை விரைந்து இனிது ஒப்புநோக்கியுதவிய சைவப் பற்றும் தமிழ்ப்புலமையும் சான்ற ஆணையாளர் கோவை ம. இராமச் சந்திரன் செட்டியார் அவர்கள், தமிழ் நாட்டிலுள்ள கோயில் களின் அருமை பெருமை, அவற்றைக்குறித்த அருண்மொழிகள், புராண வரலாறுகள், வழிபட்டுப் பேறுற்ற பெரியார்கள் விபரங்களை யாவரும் அறிந்து பயனுறச்செய்துவரும் முயற்சி, நாளடைவில் நம் நாட்டில் கடவுட்பற்றையும், அறிவையும், மக்கள் வாழ்வையும் மேம் படுத்துமென்பது தெளிவானது. இவர்கள் இத்தகைய தொண்டை இடைவிடாது செய்ய இறைவன் அருள்புரிக. யான் மேற்கொண்ட இச்சிறு பணி நிறைவேறக் காரணமாக இருந்த மேற்குறித்த இருவர் களுக்கும் என் அன்பார்ந்த நன்றி பெரிதும் உரித்தாகின்றது.

இச்சிறுநூல் சூத்திரம்போல் உருவிற் சிறிதாயினும் பொருளில் பெரிதாவது என்னும் உண்மை, ஊன்றிப் படிக்கும் அறிஞர் உள்ளத்துத்தோன்றித் திகழ்வதாம். காலநீட்டிப்புக்கும் பக்கப் பெருக் கத்துக்குமஞ்சி, கோயிலைக்குறித்த மேற்கோள் நூல்களினின்றும் ஒன்றிரண்டுசெய்யுட்களே எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. இவை படிப்பவர்க்கு ஆர்வம் விளைத்து முழுநூலையும் பார்த்து இன்புறத் தூண்டுவனவாம். இவ்வரலாற்றைப் படித்தறியும் அன்பர்கள் குற்றங் களைந்து குணங்கொண்டு போற்றி ஊக்க வேண்டுகின்றேன்.

**பு. சி. புன்னைவனநாதன்,**
தமிழ்ப் பேராசிரியர்,
அர்ச். சவேரியர் கல்லூரி,
பாளையங்கோட்டை.

"புலவரகம்"
22—10—42



## இரண்டாம் பதிப்புரை.



1942.ம் வருஷம் திருநெல்வேலி நெல்லையப்பர் காந்திமதி தேவஸ்தானம் நிர்வாக அதிகாரியாயிருந்த திரு R. மோகன் ரெங்கைய நாயுடு B. A. B. L. அவர்களால் ஷை தேவஸ்தான வரலாறு அச்சிடப்பட்டு, இரண்டாம் பதிப்பாக ஒருசில திருத்தங்களுடன், சென்னை இந்துமத அறநிலையப் பாதுகாப்புக் கழக தலைவர் உயர்திரு ராவ்பகதூர் T.M.சின்னையா பிள்ளை M.A. B.L. அவர்கள் ஆணையின்படி அச்சிடப்பட்டது.

திருநெல்வேலி,
1 — 10 —51

**V. சுந்தரராஜ பிள்ளை** B. A. B. L.
*நிர்வாக அதிகாரி.*





சுவாமி நெல்லையப்பர்
கோவில்
அமைப்புப்படம்.

# படத்திலுள்ள எண்ணும் விபரமும்
## சுவாமி கோவில்.

1. திரு. மூல லிங்கம்
2. வேண்டவளர்ந்த நாதர்
3. நெல்லைக்கோவிந்தர்
4. சந்திரசேகரர்
5. ஸ்ரீ தக்கணாமூர்த்தி
6. பிள்ளையார்
7. நந்திகேசுரர்
8. பிள்ளையார் உத்ஸவர்
9. பாண்டியராஜா உத்ஸவர்
10. கங்காளநாதர்
11. சுப்பிரமணியர்
12. சண்டேசுரர்
13. நடராஜர் உத்ஸவர்
14. மஹிஷாசுர மர்த்தனி
15. பால வைரவர்
16. அறை
17. சௌந்தர நடராஜர்
18. அறை
19. பொல்லாப்பிள்ளையார்
பிள்ளைத்தொண்டு விநாயகர்]
20. சிவலிங்கம்
21. நெல்லையப்பர் & காந்திமதி
உத்ஸவமூர்த்தி
22. அறை
23. அறை
24. அறை
25. மடைப்பள்ளி
26. அறுபத்துமூவர் உத்ஸவர்
27. சப்தரிஷிகள்
28. சுரதேவர்
29. சப்தமாதர்
30. அறுபத்துமூவர் மூலவர்
31. சோமாஸ்கந்தர்
இராவணன் தாங்குகைலாசமலை
32. சிவலிங்கம் &
முழுதுகண்டராமக்கோன்
33. அறை
34. அறை
35. சுப்பிரமணியர்
36. அறை
37. சந்தன நடராஜர்
38. திருநடனசபை - தாம்பிரசபை
39. அறை
40. தேவேந்திரலிங்கம்
(சகஸ்ராக்ஷலிங்கம்)
41. குபேரலிங்கம்
42. அஷ்ட லக்ஷிமிகள்
43. சனீசுர பகவான்
44. அறை
45. பெரிய சபாபதி
46. சந்திரன்
47. சூரியன்
48. கச்சேரிப் பிள்ளையார்
49. ஸ்ரீ தக்கணாமூர்த்தி
50. திருப்பணி ஆறுமுகநயினார்
முன் மண்டபம்
51. ஷை நடுமண்டபம்
52. திருப்பணி ஆறுமுகநயினார்

53. வன்னியடி சாஸ்தா
54. வைரவர்
55. நந்தவனம்
56. அபிஷேக தீர்த்தம் கிணறு
57. அறை
58. மீனாட்சிசுந்தரேசர்
59. பன்னிருதிருமுறைக் கோயில்
60. சைலப்பநாதர்-சிவலிங்கம்
61. அனவரதகான்நாதர் சிவலிங்கம்
62. அறை
63. அறை
64. சிவலிங்கம்
65. அறை
66. அறை
67. குத்துப்புரை
68. சிவலிங்கம்
69. சிவலிங்கம்
70. சிவலிங்கம்
71. [illegible]சாலை மண்டபம்
72. [illegible]வார [illegible]
73. [illegible] மண்டபம்
74. [illegible]விக்கிர[illegible]
75. நந்[illegible]
76. கோபுரவாசல் [illegible]டபம்



## அம்மன் கோவில்.

77. ஸ்ரீகாந்திமதியம்மன் கோயில்
78. மடைப்பள்ளி
79. சண்டேசுரர்
80. ஆறுமுகநயினர்
81. யாகசாலை மண்டபம்
82. கிளிக்கூடு மண்டபம்
83. அறை
84. பசுப்புரை
85. பூதத்தான் கோயில்
86. மண்டபம்
87. ஆயிரக்கால் மண்டபம்
88. வல்லபை கணபதி
89. மகாலிங்கம்
90. கருமாறித்தீர்த்தம்
91. கருமாறிசுப்பிரமணியசுவாமி)
92 சிவலிங்கம்
93. சிவலிங்கம்
94. காசிவிசுவநாதர் சிவலிங்கம்
95. சுப்பிரமணியர்
96. வசந்த மண்டபம்
97. சங்கிலி மண்டபம்
98. மஞ்சணை வடிவம்மன்
99. சாஸ்தா
100. அறை
101. ஸ்தாபித லிங்கங்கள்
102. பசுப்புரை
103. தெப்ப மண்டபம்
104. நந்தவனம்
105. பசுப்பரை
106. பொற்றாமரைத் தீர்த்தம்
107. ஊஞ்சல் மண்டபம்
108. அம்மன் அம்பலம்

ஸ்ரீ காந்திமதியம்மன் கோவில் அமைப்புப்படம்.





ஸ்ரீ காந்திமதியம்மன் சுவாமி நெல்லையப்பர் கோயில் அமைப்புப் படம்

# திருநெல்வேலி
# திரு. நெல்லையப்பர் காந்திமதி
# தேவஸ்தான வரலாறு.

நெல்லையப்பர் காந்திமதி நீடுதல வேணுவனத்
தெல்லை வரலா றெடுத்துரைக்க—நெல்லை
முருகன் ஒருகோட்டு முக்கண்ணன் மூவர்
அருள்வேட்டு நிற்பன் அகம்.

## 1. தல விபரம்.

**திருநெல்வேலி,** திருநெல்வேலித் தாலுகாவின் நடுவில் உள்ளது. திருநெல்வேலித் தாலுகா, திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள எட்டுத் தாலுகாக்களில் ஒன்று. திருநெல்வேலி தென்பாண்டி என்றழைக்கப்படும். பாண்டி நாடு தமிழ் நாட்டு முப்பகுதியுள் ஒன்று. இதனை ஆண்டுவந்தவர் பாண்டியர். மற்றவையாகிய சேர சோழ நாடுகளை முறையே சேரரும் சோழரும் ஆண்டு வந்தனர்.

பாண்டி நாட்டின் மற்றொரு பகுதியாகும் வடபாண்டியாகிய **மதுரை,** தலைநகராக விளங்கியதுபோலவே **திருநெல்வேலியும்** தலைநகராக விளங்கியுள்ளது. திருநெல்வேலி ஜில்லா அல்லது சீமையைச்சார்ந்த **கொற்கை** மிகப் பழங்காலந்தொட்டே, பாண்டிய இளவரசரின் இருக்கை நகராக விளங்கியது. தத்துவப்பேராசிரியர் ராவ்பகதூர் P. சுந்தரம் பிள்ளை, நிலமகளைப் பசுவாகவும், பரத கண்டத்தைப் பசு மடியாகவும், தென்பாண்டி நாட்டைப் பால்சொரி **சுரையாகவும்** சிறப்பித்துள்ளார்.

திருநெல்வேலிச் சீமையின் நான்கெல்லை; கிளருமணி அருவிசொரி குற்றாலத்துக்குக் கிழக்கு, முத்தமிழ் மதுரைக்குத் தெற்கு, திருச்செந்தூருக்கு மேற்கு, கன்னியாகுமரியை அடுத்த சுசீந்திரத்துக்கு வடக்கு என்பதாக நெல்லைத் தலபுராணம் வரையறுக்கிறது. இந்தியாவின் தென்கோடி ஜில்லாவாகிய இது, சென்னைமாகாணத்திலுள்ள 26 ஜில்லாக்களில் ஒன்று. இந்த ஜில்லாவின் விஸ்தீரணம் 4325 சதுர மைல். பாண்டியன் தசாங்கச் சிறப்பிற் கூறப்படும் பொருநை என்னும் தாம்பிரபரணியாகிய ஜீவநதி மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள அகத்தியர் மலையாகிய பொதிகையில் உற்பத்தியாகி, 75 மைல் நடந்து கொற்கையை அடுத்து மன்னார்குடாக் கடலில் சங்கமமாகிறது. இந்நதியின் நீரைப் பாசனத்துக்குப் பயன்படுத்த ஏதுவாகக் **கோடைமங்கல அணைமுதல் புதுக்குடி அணை** ஈருக எட்டணைகள் கட்டப்பட்டுள்ளன. குற்றாலத்திலிருந்துவரும் சிற்றாறும், மணிமுத்தாறு கடனையாறு, பச்சையாறு, முதலியனவும் இந்தச் சீமையை வளம்படுத்துகின்றன. காவேரித்திர நன்செய்களிலும் தாம்பிரபரணித்திர நன்செய்கள் மேலானவை; அதிவிலையுள்ளவை. இந்த ஜில்லாவின் கடற்கரையோரம் நீளம் 85 மைல். மிதமான மழையும் உஷ்ணமும் உடையது. வைகாசி முதல் இரண்டு மூன்று மாதங்கள் சாரல் மிகுந்திருக்கும். அப்பொழுது குற்றாலக்காட்சி மகிழ்ச்சி பயப்பது.

**திருநெல்வேலித் தாலுகா:—** இது 326 சதுர மைலில் 130 கிராமங்களையும் அவற்றில் 236000 ஜனங்களையுமுடையது. தென்னிந்திய இருப்புப் பாதையால் இணைக்கப்பட்டிருப்பது. ஜில்லாத் தலைமை ஆபீசுகள் தாம்பிரபரணிக்குத் தென்கரையில் பாளையங்கோட்டை முனிசிபல் எல்லைக்குட்பட்ட கொக்கிரகுளத்தில் இருக்கின்றன

**திருநெல்வேலி நகர்:—** இது. திருநெல்வேலி ஜங்ஷன் இருப்புப்பாதை நிலயத்துக்கு மேற்கே 1½ மைல் தூரத்தில் இருப்பது. நகர் நடுவில் திரு நெல்லையப்பர் காந்திமதியம்மன் கோவில் விளங்குகிறது. அழகிய நெல் வயல்கள் நகரைச் சூழ்ந்து வேலிபோல் விளங்கும். பஞ்ச சபைகளில் ஒன்றாகிய **தாம்பிர சபையை** உடையது. பண்டு மூங்கிற்காடாயிருந்து **வேணுவனம்** என்ற பெயர் பெற்றது. சிவபெருமான், தம் நைவேத்தியத்திற்காக வேதசர்மா பிச்சை எடுத்துவந்து உலர்த்தியிருந்த நெல்லை, எதிர்பாராது பெய்த பெருமழை அடித்துப்போய்விடுமோ என்று வருந்தியதறிந்து. நீராற் கேடடையாதபடி வேலியாக நின்று காத்தருளினமையால், **நெல்வேலி** என்றழைக்கப்பட்டது. திரு. என்பது சிறப்பு அடைமொழி.

திருநெல்வேலிச் சரித்திர நூலாசிரியராகிய **பிஷப் கால்டுவெல்,** இந்நகர் மதுரையிலிருந்து அரசாண்ட நாயக்க மன்னர் காலத்தில் தென் பகுதியின் பிரதான நகரமாயிருந்தும், கோட்டையாற் காக்கப்படாதது; கிழக்கே 3 மைல் தூரத்திலுள்ள **பாளையங்கோட்டை** மதுரைக்குத் தெற்கேயுள்ள கோட்டை நகர்களில் கற்கோட்டையால் மிகப் பலமானதென்று கொள்ளப்பட்டதனால் என்றும், ஆங்கிலத்தில் (Tinnevelly) டின்னவெலி என்றெழுதுவது சரியன்று திருநெல்வேலி என்றுதான் எழுதவேண்டும் என்றும் கூறியுள்ளார். கி பி. 7-ம் நூற்றாண்டில் விளங்கிய, சைவசமயாசாரியர் நால்வரிலொருவராகிய திருஞானசம்பந்த சுவாமிகள் திருநெல்வேலி என்ற பெயருடன் **திருநெல்வேலிப்பதிகம்** பாடியிருப்பதால், அதற்கு முன்னரும் திருநெல்வேலிப் பெயர் வழங்கப்பட்டிருக்கவேண்டும். பாண்டிய நாட்டிலுள்ள பாடல்பெற்ற பதினான்கு தலங்களுள் ஒன்றாகிய இது, வேய்வனம் என்றும் அழைக்கப்படும்.

போக்கு வரவு வசதி கருதிச் சிந்துபூந்துறையை அடுத்துத் தாம்பிரபரணியாற்றில் இற்றைக்கு ஒரு நூற்றூண்டுக்குமுன் ஜில்லா நாயிப் செரிஷ்டதாராக விளங்கிய பேரருட் செல்வர் திருமணம் R. R. சுலோசன முதலியார் பெரும் பொருட் செலவில் 11 கண்களுடன் செங்கல்லாற் கட்டிவைத்த பாலம் பார்வைக்கு மகிழ்வூட்டுவது. சுமார் 1000 அடி நீளமுள்ளது. இது **வாட்டர்லூ** பாலத்தை ஒத்திருப்பதென்று மதித்த கிழக்கிந்தியக் கம்பெனி டைடிரக்டர்கள் 1844-ல் பாலத்துக்கு மேற்கே ஒரு **பெருங்கற்றூண்** நாட்டி அதில் முதலியார் செயலைப் பாராட்டியுள்ளார்கள்.

**சுவாமி நெல்லையப்பர் பெருவழி.** இது, திருநெல்வேலி ஜங்ஷனிலிருந்து நகருக்குச் செல்வது. சுமார் 1½ மைல் உள்ளது. வழியின் இருபக்கமும் எவ்விடமுங் காணப்பெருத மருதமரங்களின் சாலை அமைந்துள்ளது. சிமெண்டாலும், தாராலும் செப்பனிடப்பட்ட தளம் பரந்த ரஸ்தாவாலாயது. ரயிலை விட்டிறங்கியதும், நகரப் பஸ்களிலோ, ஜட்கா, மாட்டு வண்டிகளிலோ ஏறிச்செல்லலாம். வழியில், பலவகைக் கடைகள், மளிகைகள், பாங்குகள், தந்தி தபால் ஆபீசு, லோக்கல் பண்டு முகமதியர் சத்திரம், மிருக வைத்தியசாலை, சி. எம். ஹைஸ்கூல், முனிசிபல் ஆபீஸ், தாலுகா ஆபீஸ், துரைத்தனத்தார் போதனுமுறைப் பாடசாலை இவைகளைப் பார்த்து மேல்நகரவளைவைக் கடந்ததும், அடிபரந்த மிக உயரமில்லாது விளங்கும் சுவாமி நெல்லையப்பர் கோவில் இராஜகோபுரத்தைக் காணலாம். போகப்போகத் தெப்பக்குளம் ஆதிசைவர் வீடுகள், அனுப்பு மண்டபம் இவற்றைப் பார்த்து நெல்லையம்பலத்தைக்கண்டு வணங்கித் தென்பக்கமாக ஒரு பர்லாங்கு செல்லும்பொழுது, அம்மன், சுவாமி தேர்கள், சரசுவதி கோவில், வேதாகம பாடசாலை, கடைகள், சௌந்திர சபை இவற்றைக் கடந்ததும், **காந்திமதியின் அம்பலம்**

காணப்படும். அக்கோவிலுக்குள் நுழைந்து வழிபாடு செய்வதற்குமுன் அக்கிழரதவீதி வழியே போனால் பாங்கு, கழகம் வாகையடியம்மன் கோவில் இவற்றைப் பார்த்துத் தெற்கே 3 பர்லாங்கு தூரத்தில் திருநெல்வேலி டவுன் ஸ்டேஷன் இருக்கக் காணலாம். ஸ்டேஷன் ரஸ்தாவில் மந்திரமூர்த்தி ஹைஸ்கூல், சத்திரம் சாவடிகள் இருக்கின்றன.

ரதவீதி முதலியன 1559-63-ல் ஆண்ட விசுவநாத நாயக்கரின் தளவாய் **அரியநாயக முதலியாரால்** அணிவகுக்கப்பட்டவை. தெற்கு ரதவீதி முடிவில், சந்திப்பிள்ளையார் கோவிலும், மேல ரதவீதியில் கடைகளும், லாலா சத்திரமும், வடக்கு ரதவீதியில் பல கடைகளும், சங்கரன்கோவில், தென்காசிக்குப் போகும் பாதைகளும் காணப்படும். வடபக்கம் தொண்டர்நயினார் கோவில், பிட்டாபுரத்தியம்மன் கோவில் உள்ளன. மேல்பக்கம் செங்குந்தர், இடையர், முகமதியர் முதலியவர் குடியிருப்புளது

**சத்திரங்கள்:—** ஜங்ஷனில் லோக்கல்பண்டு சத்திரம், துவாதசி மடம், தருமபுர மடம், சந்திரவிலாஸ் முதலியனவும், கிழக்கே ஞானமணியம்மாள் சத்திரமும், தெற்கே குறுக்குத்துறைச் சத்திரம் மடம் முதலியனவும் தங்குவதற்கு வசதியானவை.





அம்மன் கோயில் ஊஞ்சல் மண்டபம்

## 2. காந்திமதியம்மன் கோவில்.

இக்கோவில் முகப்பின் அம்மன் அம்பலம் ஒன்றுள்ளது. இது, திரிசிரபுரம் சிவராமகாசியா பிள்ளையால் அமைக்கப் பட்டது. இதிலமைந்துள்ள கணபதி, முருகர் இவர்களை வழிபட்டுக் கோபுரத்துட் செல்வோம். இக்கோபுரம் கி. பி. 1626-ல் அதாவது சுவாமி கோவில் கோபுரம் கட்டி. இருபது வருடங்களின் பின் கட்டப்பட்டது. நுழைந்ததும், ஊஞ்சல் மண்டபம் காணப்படும்.

**ஊஞ்சல் மண்டபம்:—** இது, தத்துவம் 96 என்பதை மக்கட்கு விளக்கிக் காட்டுவதுபோல் 96 திண்ணிய கற்தூண் களால் அழகுபெற அமைக்கப்பட்டுள்ளது. தள வரிசை சலவைக் கற்களால் பத்திபத்தியாக விளங்குகிறது. வர்ணத் தூண்களின் அழகு மிக்கது. நிலைக் கண்ணாடி அறை அமைந் திருப்பது. ஐப்பசி மாதம் காந்திமதி திருமணம் நிறைவேறி யதும், 3 நாள் ஊஞ்சல் விழா நடைபெறும், நான்மறைகளும் தேவாரம் திருவாசகங்களும், சமயச் சொற்பொழிவுகளும் நடைபெறுதற்கிடமானது. கோவில் நூல் நிலையமும், தேவாரப் பாடசாலையும் அமைந்து சிறப்பது. பத்திரதீப, லட்சதீப விழாக்காலத்தில் திருவோலக் காட்சியும் இதில் காணலாம். இம்மண்டபம் அமைத்துதவியர், சிந்துபூந்துறைத் தீர்த்த மண்டபமாகிய **தைப்பூச மண்டபம்** கட்டியருளிய சேரகுளம் **பிறவிப்பெருமாள் பிள்ளையன்** அவர்கள்.

**ஆக்கோட்டம்:-** முன்பு இது கோவிலின் தென்கிழக்குப் பக்கம் அமைந்துள்ளது. இப்போது அம்மன் கோவிலின் வட கிழக்கில் அமைந்து, இதில் அபிடேகத்துக்குப் பயன்படும்படி ஆனிரைகள் பொருந்தியுள்ளது.

**திருக்கல்யாண மண்டபம்:—** பசுத்தொழுவுக்கு மேல் புறம் இம்மண்டபம் 520 அடி நீளம் 63 அடி அகலமுடன் **ஆயிரங்கால் மண்டபம்** என்ற சிறப்புடன் விளங்குகிறது. இதில் காந்திமதியம்பாள் திருமணச் சடங்கும், பங்குனி உத்திரச் செங்கோல் திருவிழாவும் நடக்கும்.

**பொற்றாமரை:—** இது ஊஞ்சல் மண்டபத்துக்கு வட புறம் விளங்கும் புண்ணிய தீர்த்தம் அமைவனத்தனும் சிவ பெருமானே நீர் வடிவாயினன். பிரமன் பொன்மலரோடு வந்தெழுந்தனன். ஆகவே, இத்தடம் பொற்றாமரை என்ற பெயர் பெறுவதாயிற்று. இப்பொய்கையின் நாலா பக்கமும் கற் படித்துறைகளும், சுற்றுக்கால் மண்டபமும் அமைந் துள்ளன. இதன் கீழ்புறம் படித்துறை மண்டபம் படித்துறை கள் திருவாவடுதுறை ஆதினத்தாராலும், தென்புறம் படித் துறை, மண்டபம் தருமபுரம் ஆதினத்தாராலும் மேல்புறம் வடபுறம் மேல்பாதிப் படித்துறை மண்டபங்கள், கி. பி. 1756ல் மகமதிசுபுகான் அதிகாரியாக விளங்கிய வேங்கட கிருஷ்ண முதலியாராலும், வடபுறம் கீழ்பாதிப் படித்துறை யும் மண்டபமும் ஆயம் தானப்ப முதலியாராலும் செய் தமைக்கப்பட்டன. இப்பொழுது சுமார் 20 வருடங்கட்குமுன் கற்பூரப்பணிவிடை சிவசூரியப் பரதேசியாரின் பெருமுயற்சி யால் மேற்படி படித்துறைகள் மாற்றிப் புதுப்பிக்கப் பட்டுள்ளன. திருநெல்வேலி மேலரதவீதியிலுள்ள சுந்தரத் தோழபிள்ளை வீடு முதல் மடைவைத்து வாய்க்கால் நீர் இப் பொய்கைக்குக் கொண்டுவரப்பட்டுப் பின் கல்லத்தி முடுக்கு வழியாக நகர்க்குக் கீழ்புறமுள்ள தெப்பக்குளத்துக்கும் கொண்டுபோகப்படுகிறது. இப்பொற்றாமரையில் மாசி மாதம் மக நாளில் திருநாவுக்கரசு நாயனர் தெப்பவிழா நடைபெறும்.

அருந்திருவிளையாடல்களுக்கு இடமான இப்பொற்றாமரையில் நீராட்டிச் சந்தியாவந்தனம் செய்து, பின் தடாகத்தின் மேல் புறம் அமர்ந்திருக்கும் பொற்றாமரைப் பிள்ளையார், வாணி, தக்கணாமூர்த்தி, பால்வண்ணநாதர் இவர்களை வழிபட்டு, அம்மன் கோவிலுக்குட் போவோம்.

**அம்மன் கோவில்:-** சுந்தரத்தோழபிள்ளையின் தருமமாகிய நிருதிமண்டபத்திற்கு வடபக்கமிருக்கும் கொடிமரப் பக்கம் நந்தியை வணங்கிக் கோவிலுள்போய், இடதுபுறமாகத் திரும்பி **மணி மண்டபம்** வழியாக நடுமண்டபம் புகுந்து, கர்ப்பக்கிருகத்தில், தலையில் வயிரமணிமுடி ராக்கடி முதலியனவும் முகத்தில் பொட்டு மூக்குத்தி புலாக்கும், மார்பில் நவமணிவட முதலியனவும், அடியில் மணிச்சிலம்பும் அழகு பெற, வலக்கையுயர்த்தி இடக்கை தாழ்த்தியும், தாமரை, கிளி இவற்றுடன் ஒளிசிறந்து விளங்கும் **வடிவாளை** வணங்கித் திருநீறு குங்குமம் பெற்றணிந்து, நடுமண்டபம் வடபால் விளங்கும் பொன்மயமான பள்ளியறையைக்கண்டு, அர்த்த சாமவேளையில் சிவன் உமையோடு அமர்ந்திருப்பதற்கான ஆராதனைக்காலத்தில் தரிசனம் பெறவேண்டும் என்ற ஆர்வமுடன் திரும்பிப் பிரகாரமாகவரின், கன்னியில் அமர்ந்துள்ள கணபதியையும், வாயுவில் விளங்கும் முருகனையும் வழிபட்டு, உமையின் திருமஞ்சனக்காப்புப் பொட்டிட்டுச் சண்டேசுரரை வணங்கிப் பின் பிரதோடவிழா மண்டபத்தைக் கடந்து, ஈசானத்தில் எழுந்தருளியிருக்கும் ஆறுமுகப்பெருமானையும் வழிபட்டு வெளிப்பிரகாரம் வலம் வருவோம். ஆயிரக்கால் மண்டபத்தையடுத்த வடபுறம், மேல்புறம் பிரகாரம் முக்கால் பங்கும் (நாலுகால் மண்டபத்துடன்) தளவாய் அழகப்ப முதலியார் தருமம். மேல்புறங் காற்பங்கும் வடபுறப்

பிரகாரமும் ஒருபத்தி மண்டபமும் மண்டபப்படி திருமலையப்ப பிள்ளையன் தருமம்.

**கருமாறித் தீர்த்தம்:-** இது மேலப்பிரகாரத்தில் இருப்பது. துருவாசமுனி சாபத்தால் யானையான இந்திரத்துய்மன் என்ற மன்னன் இதில் மூழ்கியதும் தன் பழையதேவவடிவை அடைந்ததனால், இது கருமாறி என்றழைக்கப்பட்டது. அம்மன்கோவில் வெளி வடப்பிரகாரத்தில் ஆறுகாலதீர்த்தக் குண்டம் உள்ளது.

**கோவிலின் பழமை:-** அம்மன் கோவிலும் சுவாமி கோவிலும் புராணப்படி முதலில் **முழுதுகண்டராம பாண்டியனும்**, பின் கி. பி. 7-ம் நூற்றாண்டினருகிய **நின்றசீர் நெடுமாறனும்** கட்டப்பட்டனவாம். கோவில்கள் இரண்டும் தனித்தனியாக விளங்கின.

**பின் அமைப்பு:-** இடை வெளியை அழகுபடுத்த இருவர் முயர்ச்சி ஏற்பட்டது. கி. பி. 1647-ல் **வடமலையப்ப பிள்ளையன்** இரண்டு கோவிலையும் இணைக்கவிரும்பிச் **சங்கிலி மண்டபத்தை** அமைத்தனர். இதில் பச்சைவடிவாள், காசிவிசுவநாதர் சாத்தர், அனுமர் அர்ச்சுன பீமர்கள் அமைக்கப்பட்டுள்ளார். இம்மண்டபத்துக்கு மேல்பக்கந் தெற்கோரம் குமரன்கோவில் அமைந்துள்ளது. இதில் கந்தசஷ்டி விழா ஆறுநாளும் நடைபெறும். சங்கிலி மண்டபத்தூண் அமைப்பு வியப்புக்கிடமானது.

சங்கிலி மண்டபத்துக்கு மேல்புறம் வெளியான இடத்தில் 1756-ல் **வெங்கடகிருஷ்ண முதலியார்** தென்னம்பிள்ளை முதலியன வைத்து நந்தவனம் அமைத்துள்ளார். இந்நந்தவனத்தின் நடுவில் நூறுகால்களுடன் சதுரம்பட அமைந்துள்ள

**வசந்தமண்டபம்** ஏற்படுத்தப்பட்டுள்ளது. இளவேனிற் காலமாகிய சித்திரை வைகாசி மாதங்களில் நெல்லையப்பருக்கும் காந்திமதிக்கும் வசந்தவிழா மண்டபப்படிகள் சிறப்பாக நடைபெறும். மின்சார விளக்கு அமைப்புடன் விளங்கும் இது, சமயச்சொற்பொழிவுகட்கும் இசையரங்கு முதலியவற்றிற்கும் மிகப் பொருத்தமாக விளங்கிவருகிறது.

## சுவாமி நெல்லையப்பர் கோவில்.

சுவாமி கோவில் தெற்குப் பிரகாரம் மத்தியில் தட்சிணாமூர்த்திகோவில் முன், சங்கிலி மண்டபத் தொடர்ச்சி வடக்கோரத்தில் **நடுக்கோபுரம்** உள்ளது. இதற்குத் தெற்குப் பக்கமுள்ள மண்டபம் வடமலையப்ப பிள்ளையன் உடன்பிறந்தார் தருமம். சங்கிலி மண்டபங்கட்டிய வடமலையப்ப பிள்ளையன் அவர்களே சுவாமி கோவில் பிரகாரங்களில் வடபிரகாரம், நீங்கலானவற்றை அமைத்திருப்பவர். வடக்குப் பிரகாரம். மைத்துனர் **திருமலைக்கொழுந்துப் பிள்ளையனாலும்** பொது மக்களாலும் கட்டப்பட்டது. இப்பிரகாரம் **சீபலி மண்டபப்** பிரகாரம் எனப்படும். இப்பிரகாரம் மண்டபங்கள் உயர்ந்து பருத்த கற்றூண்களால் தாங்கப்பட்டும், கற்றளவரிசையிடப் பட்டும் உள்ளன.

**தெற்குப் பிரகாரம்:—** தெற்குப் பிரகாரம் தென்பக்கம் இழோரமுதல் பேராலவட்டம், கொடி, வாகனங்கள், தோரணங்கள் இவை வைக்கப்படும் அறைகள் விளங்கும். அறைகளுக்கு முன்நிற்குந் தூண்களில் பிள்ளையன் காலம்வரை அரசாண்ட நாயக்க மன்னர்களின் சிலைகள் அமைக்கப் பட்டுள்ளன. இவை, மதுரைப் புதுமண்டபச் சிற்பத்தை

நிறைப்பூட்டும். இப் பிரகாரத்தின் தென்மேற்கில் திருப்பணி மண்டபம் உள்ளது. 6-வது 7-வது விழாநாட்களில் சுவாமியும் அம்மனும் இங்கு எழுந்தருள்வர்.

**ஆறுமுகநயினர் கோவில்:-** இது இப்பிரகார வாயு திசையில் பெரிதாக அமைந்துள்ளது. ஒரே கல்லிலேயே மயில் வாகனத்தில் அறுமுகப்பெருமான் வள்ளி தெய்வயானையுடன் எழுந்தருளியிருக்கும் காட்சி மாட்சியானதே. *1642*-ல் திருச் செந்தூரில் முருகப்பெருமானைப் பகைவர் கைப்பட்டிருந்த தினின்றும் மீட்டுப்பிரதிட்டித்த பிள்ளையன் அவர்களே இக் கோவிலையும் அமைத்துள்ளார்.

**மேலப் பிரகாரம்:-** இதன் நடுவில் மேலக்கோபுரமிருக் கிறது, சுதைப்பிள்ளையார் பிரதிட்டையும், வெள்ளிக்கோரத மண்டபமும் குறிப்பிடத்தக்கன.

**வடக்குப் பிரகாரம்:-** இதன் நடுவில் வடக்குக் கோபுரம் இருக்கின்றது. ஆண்டுக்கிருநாள் திறக்கப்படும். சுவாமி ஆறுகாலத் தீர்த்தக்குண்டம் இங்கு உள்ளது. ஈசான வெளி யில் யானை கட்டுவதுண்டு.

**கீழப் பிரகாரம்:-** இதன் வடபக்கம் 78 திண்ணிய வருணைத்தூண்களுடன் கூடிய **சோமவார மண்டபம்** விளங்கும் இதில் அமைந்துள்ள கல் உத்திரங்களும், வளைவுகளும் மர உத்திரங்கள் வளைவுகள் போலவே கவின்பெறுகின்றன. இம் மண்டபத்தில் கோபுரம் ஒப்ப அமைக்கப்பட்டிருக்கும் அழகிய கற்றூண் காணத்தக்கது. இம்மண்டபத்தில் புரட்டாசியில் நவ ராத்திரி விழாவும், கார்த்திகையில் சோமவார மண்டபப்படி களும் நடைபெறும். இம்மண்டபத்துக்கு மேல்பக்கம் வன்னி



சுவாமி கோயில் வாயிற் சிற்பமும், பெரிய கொடிமரமும்.

14-ம் பக்கம் பார்க்கவும்.

யடிச் சாத்தனுர், யாகசாலே, வயிரவர் தங்கும் மண்டபங்கள் உள்ளன. அர்த்தசாம முடிவில் வயிரவர் பூசை காணத்தக்கது நடுவில் சந்நிதி ரிஷப மண்டபத்துக்கு வடக்கே **நவக்கிரக மண்டபம் உள்ளது.** சுவாமி சந்நிதி வழியாகக் கோவிலுள் நுழையும் அன்பர்கள் முதலில் நெல்லேயம்பலத்திலுள்ள பிள்ளேயார், முருகரைக் கும்பிட்டுக் கோபுரவாயிலில் நுழைந்ததும், திருவாசி தொழுது தென்புறம் சைவசமய குரவர்களுடன் சேக்கிழாரும் எழுந்தருளியிருக்கும் கோவிலே வழிபட்டு, **சர்வநல்வாத்திய** மண்டபத்தில் அமர்ந்து, பாசம் என்னும் பலிபீடம் பின்னதாகவும் பசுவாம் இடபம் இடையதாகவும் பதி என்னும் சிவம் முன்னதாகவும் உள்ள தத்துவக்குறியை நினைந்து, பெரிய இடபத்தை வழிபட்டுச் சுவாமி கோவிலுட் புகவேண்டும். இந்த ரிஷப மண்டபம் கி. பி 1654–ல் **சிவந்தியப்ப நாயக்கரால்** செய்யப்பட்டது. இதன் முன்னுள்ள **பெரிய கொடிமரம்** கி. பி. 1555–ல் காளயுத்தி வைகாசிமீ பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது. சர்வ நல்வாத்திய மண்டபத்தூண்களில் விளங்கும் கற்சிற்பங்களும், கோவில் வாயிற்றூண்களில் விளங்கும் விசித்திர வீரபத்திரர் முதலிய விக்கிரகங்களும், நம்நாட்டுப் பண்டைச்சிற்பிகளின் கைத்தொழில் வன்மையைக் காட்டுவன.

உள்வாயிலில் நந்திதேவரை வழிபட்டுச் சிறிய கொடிமரத்தையும் சூரிய தேவனேயும் வணங்கி **மணி மண்டபம்** அடைவோம். இம் மணி மண்டபம் மிக விசித்திரமானது. ஒரே பெருங்கல்லில் மத்தியில் பெரிதாக ஒன்றும் சுற்றிலும் உருவிலும் உயரத்திலும் வித்தியாசமான 48 சிறு தூண்களாக அமைக்கப்பட்ட ஒரு ஜோடி தூண்கள் உள்ளன. ஒவ்வொரு சிறு தூணேயும் ஒலிப்பித்துப் பார்த்தால் ஒவ்வோரிசை வெளிப்படும்படியாக அமைந்திருப்பது, வியப்பையும் மகிழ்ச்சியையும் பெருக்கும். இம்மண்டபம் அமைத்தவர் கி. பி. 7-ம் நூற்ருண்டில் விளங்கிய கூன்பாண்டியன் என்னும் **நின்றசீர் நெடுமாறனுரே.**

"நீதி தழைத்தோங்கு திருநெல்வேலிநாதர் முன்பு நிலைபெற்றோங்கச்
சோதி மணிமண்டபத்தைத் தூயமகமேரு வெனத்துலங்கச்செய்தே
வேதிகை பொற்படி தூண்கள் விளங்குதிருவாயிலணி விரவிச்சூழ்ந்த
கோதில் மணிக் கோபுரமும் சேண் மதிலும் வெள்விடையுங்
குலவச்செய்தான்"

என்ற தல புராணச்செய்யுள் மேற்கண்ட நெடுமாறனார் இயற்றிய திருப்பணிகளை வலியுறுத்தும்.

மணி மண்டபத்தினின்று மேற்கிலுள்ள மஹாமண்டபம் வழியாய் நேரே சென்று வேணுவனநாதரை வழிபடலாம். இவர்தான் மூங்கில் முளையிற்றோன்றி முழுதுகண்ட ராமக் கோனுக்கு முத்தியளித்த வேணுவனநாதர். **முழுதுகண்ட ராம பாண்டியன்** வேண்ட பீடம் ஒவ்வொன்றாய் 21 பீடம் உள்ளடக்கி மென்மேல் வளர்ந்ததினால் **வேண்ட வளர்ந்த மஹாலிங்கம்** என்றழைக்கப்படும். இவரே நெல்லையப்பரும் ஆவர்.

இந்நாதர்க்கு வடபால் திருமால் **நெல்லைக்கோவிந்தர்** என்ற பெயருடன் சேஷசயனங்கொண்டிருக்கிறவரை வழி பட்டு, வெளியில் நடுமண்டபத்திலுள்ள பிள்ளையார், சந்திர சேகரர் முதலியவர்களை வணங்கி, **சிவலோகப் பத்தியாகும் உட்பிரகாரத்தை** வலம்வரின், தெட்சணாமூர்த்தி, தாருகாவன முனிவரின் சென்மம் ஈடேற இறைவன் எடுத்த பிக்ஷாடண வடிவம், சண்டேசுரர் இவர்களை வழிபட்டுச் சென்றால், வட பிரகாரத்தில் பள்ளத்தில் **சிவலிங்கம்** சிறப்புடன் தோன்றும். இவர் வேணுவனநாதர் வெளிப்படுவதற்கு முன்பே இருப்ப தால் இவருக்குத் திருமூலநாதர் என்று நெல்லைத் தலபுராணச் செய்யுளால் நன்கு விளங்கும். மற்றத் தளவரிசைக்குத் தாழ்ந்திருக்கும் ஆலயத்திருப்பதால் இது ஆதியில் ஏற்பட்ட ஆலயமென்று விளங்குகிறது.

பின் நடேசர், துர்க்கை, பாலவயிரவரைத் தரிசித்துத் தென்புறம்வரின், அங்கு கோவில் கொண்டிருக்கும் நெல்லையப்பர் காந்திமதி அம்மன் உற்சவ மூர்த்திகளை வழிபடலாம். பின் தெற்கு பிரகாரத்தில் உற்சவ சைவகுரவர் சந்தானசாரியார், ஏழு கன்னியர், எழுமுனிவர் மெய்யடியார் அறுபத்து மூவர், இவர்கள் சிலை பொன் மூர்த்தங்களையும் பொல்லாப் பிள்ளையார், இராவணேஸ்வரன் தாங்கி நிற்கு முறையில் உயர்ந்த பீடத்தில் விளங்கும் திருக்கைலாய மணக்கோலக் காட்சி இவையுங் கண்டு வழிபடலாம்.



**தாம்பிர சபை.**

மேல்புறப் பிரகாரத்தில் **தாம்பிர சபை** கல்வேலைவு மண்டபச் சிறப்புடன் விளங்குகின்றது. மார்கழித் திருவாதிரை நாளில் நடேசர் இதில் நடனம் புரிந்தருளுவர்.

இம்மண்டபம் மேல்பக்கம் முழுதுகண்ட ராமக்கோன் உருவம் அமைந்திருக்கிறது. தாம்பிரசபையின் பின்னுள்ள சந்தனச் சபாபதியை வழிபட்டு வடக்குப் பிரகாரத்திலுள்ள அட்ட லட்சுமி, சனி, ஆயிரமாவுருவாரிலிங்கம் கண்டு அபிடேகநீர் தெளித்துப் பின்னர் தைல அறைக்கு வடக்கே காரைக்கால் அம்மைக்கு அருள்புரிந்த பெரிய நடேசர் கோவில்புகுந்து வணங்குவோம். பின் குபேரலிங்கம், சந்திரமூர்த்தியை வணங்கி வெளியே வந்து, நவக்கிரக மண்டபத்தைச் சூழ்ந்து, கும்பாபிடேகச் சிறுமண்டபத்திருந்து தெற்கே சென்ருல், மேற்கு நோக்கிய **சைலப்பர் கோவில்** காணப்படும். எண்ணெய் அறையை அடுத்துக் கீழ்பக்கம் **அனவரதநாதர் காந்திமதியம்மை ஆலயம்** அமைந்துள்ளது. இது முகமதாவிஸ்தானதிபதி மாவஸ்கானின் மனைவி நோய் போக்கிய அற்புதத்தால் அமைக்கப்பட்டது. அன்வர்உடீன்கான் பெயரிட்ட தெய்வம், பின்னர் அனவரதநாதன் என்ருயிற்றென்பாரும் உளர்.

**கோவில் அமைப்பு:-** நகர் நடுமணியாக விளங்கும் இக்கோவில் மொத்தத்தில் 850 அடி நீளம் 756 அடி அகலங்கொண்ட எல்லையுள் அடங்கியது. அம்மன்கோவில் சுவாமி கோவில் என்ற சமமான இருபெரும் பிரிவைக்கொண்டது. ஒவ்வொரு கோவிலுக்கும் கீழ்ப்பக்கத்தில் பெரிய கோபுரங்கள் இருக்கின்றன. அம்மன்கோவில் தென்பக்கம் ஓர் வாயிலும், வடபக்கம் சங்கிலிமண்டபத்திறுதியில் ஓர் வாயிலும் இருப்பது போலச் சுவாமிகோவில் வடபுறம் ஒரு வாயிலும், மேல்புறம் ஒரு வாயிலும் இருக்கின்றன.

**தீர்த்தங்கள்:-** இத்தலத்தில் மொத்தம் 32 தீர்த்தங்கள் உள்ளன. இவற்றில் 9 தீர்த்தங்கள் முக்கியமானவை.

இவற்றில் பொற்றாமரை, கருமாறி, வயிரவ தீர்த்தம், சர்வ தீர்த்தம் இந்நான்கும் கோவிலுள் அமைந்தவை. கம்பை, தெப்பக்குளம், சிந்துபூந்துறை, துர்க்கை தீர்த்தம் குறுக்குத் துறை ஆகிய ஐந்தும் கோவிலுக்கு வெளியில் இருப்பவை. **ஸ்தல விருட்சம்—மூங்கில்.**

### ஆறு சபைகள்.

1. சிந்துபூந்துறையினில் தீர்த்த சபை.
2. சங்கரன்கோவில் ரஸ்தாவில் 10 மைல் தூரத்தில் உள்ள மானூரில், ஆச்சரிய சபை.
3. அம்பிகை கோவில் முன்னிடம் வடபால், சிவன் ஆனந்த நடனம்புரி சௌந்தர சபை.
4. அம்பிகையாலயத்து விலாப்புறம் கல்யாண சபை. (திருக்கல்யாண மண்டபம்)
5. சுவாமி கோவில் முன்னுளது அழகிய ராஜ சபை.
6. சுவாமி கோவிலுள் வாயுதிக்கில் மேன்மையான தாம்பிர சபை.

## 3. உட்கோவில், சுற்றுக்கோவில்களின் விபரம்.

கோவிலுக்குள் விளங்கும் மஞ்சணைவடிவம்மன், கருமாறிச் சுப்ரமணியசுவாமி, நடுக்கோபுரம் தெக்கணாமூர்த்தி, அனவரத நாதன், பெரிய சபாபதி. திருப்பணி ஆறுமுகநயினார் முதலியவர்கள்போக, தேவஸ்தான முகப்பில் நெல்லையம்பல விநாயகர், முருகர், தேரடிக் கருப்பசாமி, சௌந்திர சபை மாயூரநாதர், ஆத்தியடி விநாயகர், அம்மன் சந்நிதி வடபால் கரும்பனை வீரச்சாத்தா, மேரதவீதிக் குளத்தூர்ச் சாத்தா,

பூதத்தான் கோவில், வாகையடியம்மன், சந்திவிநாயகா, கல்லணை அடைக்கல விநாயகர், பேட்டை மார்க்கம் ஆலடி விநாயகர், வேணுவனக்குமரர், தடிவீரச்சாத்தா, கம்பாநதிக் காமாட்சி, வடக்குப் பக்கம் பிட்டாபுரத்தியம்மன். தொண்டர்கள்நயினர், குத்துப்புரை ஈசான விநாயகர், தெப் பக்குளத்தெரு பெரியசாமி சாத்தா, ஷ அங்குர விநாயகர், தெப்ப மண்டபம் மீனுட்சி சுந்தரேசர், வலம்புளியம்மன், நிலத்தேர் சம்பந்தர், கீழப்புதுத்தெரு மாரியம்மன், திருப்பணி விநாயகர் இம்மூர்த்திகளின் கோவில்கள் உள்ளன.

நகர்க்கு வெளியில், கறுப்பந்துறை அழியாபதீசுரர், சிக்கல் நரசையபுரம்–எட்டுக்கண்ணுறு துர்க்கை, வீரராகவபுரம் அனுமார், மேலப்பாளையம் கற்பகவினுயகர், சேந்திமங்கலம் பிள்ளையார், நல்லாம்பிள்ளைபெத்தம்மன், திருப்பணி கரிசற் குளம் அனவரத விநாயகர், திருப்பணிச் செட்டிகுளம் வடிவம்மன் இவர்கள் கோவில்களும் உள்ளன. ஆக இரு வகையிலும் 39 கோவில்கள் உள்ளன. இவற்றில் சில கோவில் களுக்குத் தனித் தருமகர்த்தர்கள் உண்டு.

## 4. சிற்பச் சிறப்புகள்.

இக்கோவில் முன் மண்டபங்களாகிய இரண்டம்பலங் களும் மர அலங்கார வேலைப்பாடு வாய்ந்தவை. இத்தகைய வேலைப்பாடுகள், பொதுவாக மரத்தேர்களில் அமைந்திருப்பன சிலவகைச் சித்திரப்பாடமைந்த மரச் சிற்பத் திறங்களைச் சிபலி மண்டபத்தில் தெக்கணமூர்த்தி முகப்பிலும் கண்டு களிக்கலாம்.

சுவாமி கோவிலில் சந்நிதி ரிஷப மண்டபத்துக்குத் தெற்கே கற்றூண்களில் விளங்கும் இசையாளர், வீரர்கள் விளங்கும் அருமை கண்டு மகிழத்தக்கவை. பெரிய கொடி மரத்துக்கு மேற்கே கோவில் முகப்பு மண்டபத்திற் றூண்களில் வீரபத்திரர் முதலிய விக்கிரங்களும் கற்சிற்பியின் கைத்திறனைக் காட்டுவன.

கோவில் மணிமண்டபத்தின் அமைப்பும் சிறப்பானது. இதில் உள்ள தூண்கள் ஒரே கல்லில் செதுக்கப்பட்ட பல சிறு தூண்கள்கொண்ட தூண் கூட்டங்களால் அமைக்கப் பட்டிருக்கிறது. அத்தூண்களை ஒலிப்பித்தால் வெவ்வேறு இசையைப் பிறப்பிக்கும்படியாய் செய்யப்பட்டிருப்பது எங்கும் காணமுடியாத அற்புதச் சிற்ப வேலையாக இருக்கிறது.

ஈசான திசையில் விளங்கும் பெரிய நடேசரின் செப்பு விக்கிரகம் உண்மையில் ஒருவர் ஆடுவதுபோன்ற அழகுடன் விளங்குகிறது.

தெற்குப் பிரகாரத்தில் பொல்லாப் பிள்ளையார் கோவிலில் எதிரிலுள்ள பிள்ளைத் தொண்டு கல்லாலமைந்திருப்பது செல்பவர் மெய்வலியைச் சோதிக்க விளங்குவது. மேலப் பிரகாரத்தில் கல்லினுலமைக்கப்பட்ட நடன மண்டபமும் தாம்பிரசபையும் அதில் மரத்தில் சித்தரித்திருக்கும் சிற்பங் களும், தாம்பிரசபைக்கு வடபக்கம் நடராஜர் சிலா விக்கிரக மும் அரிய வேலைப்பாடுகளுடையன.

சீபலி மண்டபப்பிரகாரத்திலுள்ள திருப்பணி ஆறுமுக நயினுர் விக்கிரகம்; ஒரே கல்லில் மயில் வாகனத்தோடும் துணைவியர்களோடும் செய்து விளங்குவது விசித்திரமானது.

சங்கிலி மண்டபம், வசந்த மண்டபம், சோமவார மண்டபம், ஊஞ்சல் மண்டபம் இவற்றின் அமைப்பு; பண்டைக்காலத் திராவிட நாகரீகச் சின்னமாம்.

சுதையினுல் அமைந்திருக்கும் பெரிய ரிஷபம்; இராமேசுரம், தஞ்சை முதலிய இடங்களை நினைப்பூட்டுவதாம்.

சிவலோகப் பத்தியிலுள்ள கல்வெட்டுக்களும் சுத்தமாகப் பிரதியெடுத்துப் போற்றப்பட வேண்டியவை.

கோவிலிலுள்ள கொடி வகைகள், வாகனங்கள் பழமையானவை.

# 5. திருநெல்வேலித் தலபுராணம்.

**புராண வரலாறு:-** சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்கட்குத் திருநெல்வேலித் தலம், மூர்த்தி, தீர்த்தம், விழாக்கள் இவற்றையும், தரிசித்து முத்தியடைந்தவர்கள் பெருமை முத்தியடைந்த முறைமை இவற்றையும் விரிவாகச்சொல்லினர். வடமொழியில் இருந்த புராணம் நீலகண்ட சாஸ்திரியார் உதவியால் தமிழிற் பாடப்படுவதாயிற்று. பாடியவர்; திருநெல்வேலி வேளாளர் **நெல்லையப்ப பிள்ளை** என்ற புலவர். அமைச்சர் அம்பலவாண பிள்ளைக்குத் தமையனுர். மிகுந்த சிவப்பற்றுடையவர். சிவபெருமான் திருவருள் ஆணைக்கிசைந்தே பாடினர். கந்தபுராணத்தைக் கச்சியப்ப சிவாசாரியர்க்குத் திருத்தி யுதவிய முருகப்பெருமானையொப்ப, இவரியற்றிய தலபுராணமும் நெல்லையப்பரால் அவ்வப்பொழுது திருத்தி யுதவப்பட்டது. நைமிசாரணியச் சருக்கம் முதல், தலபுராணம் படித்த வேதியனைக் கண்டபாவி கதியடைந்த சருக்கம் ஈருக 120 சருக்கங்களில் 6391 செய்யுள்கள் கொண்டது. முத்தப்ப வள்ளல் தூண்டுதலின்பேரில் இயற்றப்பட்டுச் சங்கரமூர்த்திப் பிள்ளையன் முதலியோர் போற்றச் சந்நிதியில் அரங்கேற்றப்பட்டது. புராணத்தை யிகழ்ந்த நாகப்பன் குன்மநோயாற் பொன்றினன்; பாராட்டிப் படித்த

திருவடியப்பன் குட்டநோய் நீங்கி இன்புற்றனன். ஆகவே புராணப் பெருமை தெள்ளிதில் விளங்கும்.

இப்புராணத்தில் மிக முக்கியமான வரலாறுகளை மட்டும் மிகச் சுருக்கி எழுதுவாம்.

1. **வேணுவனச் சுருக்கம்:—** நான்கு வேதங்களும் தருவாய் நின்று நிழலைச்செய்து நித்தியமாயிருக்கவேண்டு மென்று சிவபெருமானிடம் வரங்கேட்க, அவர் தாம் நடனம் புரியும் 21 தலங்களில் மிகச்சிறந்த காஞ்சி எனப்படும் நெல்லையில் வேணுவாய் அமருங்கள், அங்கு லிங்கமாயமர்ந்தருளுவோம் எனவே, வேதங்கள் மூங்கில் மரங்களாக இறைவனும் லிங்கமாகி அருள்புரிவாராயினர்.

2. **அகத்தியரைத் தென்பால் அனுப்பியது:-** இறைவன் பார்வதியை இமயத்தில் திருமணஞ் செய்கையில், தேவர்கள் யாவரும் திரண்டு கூடியதால் வடபால் தாழ்ந்து தென்பால் உயர்ந்தது. பூமியைச் சமப்படுத்த விரும்பிய இறைவன் தம்மை ஒத்த அகத்திய முனிவரைத் தென்பால் அனுப்பினர். வரும் வழியில் மாயக்கிரவுஞ்சனை அழித்தும், விந்தியமலையைத் தாழ்த்தியும், வாதாபி வில்வலனை அழித்தும், திருக்குற்றாலம் அடைந்து திருநெடுமாலைச் சிவலிங்கமாக்கியும், பொதிகையில் அடைந்தனர். பூமியும் சமநிலையடைந்தது. பின் குண்டிகைக் கங்கையைத் தாம்பிரபர்ணியாகப் பிறப்பித்து அது சங்கமமாகுமிடம் வரை பூமியை வளம்பட அருளினர். மனைவி லோபாமுத்திரையும் திருச்செந்தூர் முருகனை வழிபட்டு முத்தியடைந்தாள். அகத்தியரும் வேணுவனம் அடைந்து கைலைத் திருமணக்கோலங் கண்டு மகிழ்வாராயினர்.

3. **வேணுவனப் பெருமை:-** ஆதியாம் பிரம்மந்தானே அகமகிழ்ந்திருத்தலானும், சோதியாகிய இரண்டு லிங்கம் தோன்றியிருத்தலாலும், வேதங்களே மூங்கிலாகச் சூழ்ந்திருப்பதாலும், அமலரான திருமூலநாதர்க்கு ஆவிடையாளும் கூடவே ஆதியிற்றேன்றலாலும், மூவரும் இன்பமாக முறை புரிந்திருக்கையாலும், வடிவாள் முப்பத்திரண்டறங்கள் செய்திருப்பதாலும், பேரூழிதோறும் இறைவன் இங்கிருப்பதாலும், திருநெல்வேலியாகிய வேணுவனம் மிகச் சிறப்புடையது. மேலும் வதிவோர்க்கும், வருவோர்க்கும் முத்தியளிப்பது இத்தலம். தாருகாவனமும் இதுவே. சிந்துபூந்துறையில் ஒருநாள் நீராடினவர் பதினாயிரம் கிரிச்சா பலனடைவர். பொற்றாமரையில் ஆடினவர் அதிலும் பத்து மடங்குப் பலனையடைவர். சுவேதகேதுமுனி மிருத்துஞ்சய மந்திரோபதேசஞ்செய்து எமபயம் ஒழிந்தின்புற்றதும் இங்கு. **சர்வதீர்த்தபுரம், தென்காஞ்சி, கன்னிப்பதி** முதலிய சிறப்புப் பெயர்கள் உடையது. துர்க்கை, பிட்டாபுரத்தியாகிய தேவதைகளின் காவற்குட்பட்டது.

4. **தசரத இராமன் பேறுபெற்றது:-** இவர் மாரீசனாகிய மாயமானைத் தொடர்ந்து போகும் வழியில் கயத்தாற்றில் வில்லினுற் கீறிப் பெருநைரையை அழைப்பித்து மேல்பக்கம் லிங்கம் அமைத்துப் பூசித்துக் கோதண்ட ராமன்எனப் பெயர் கூறினர். மானூரில் மாயமானைக் கொன்றபின் சீதையைத் தேடி வருந்தினர். பின் அகத்தியரை அடைந்து அவரால் ஐந்தெழுத்து உபதேசம் பெற்று, நெல்லையப்பரை வழிபட்டு பாசுபதாத்திரம் பெற்று, இராவணனை வென்று சீதையை மீட்டு இராமநாதரை வழிபட்டு அயோத்தியடைந்தனர்.

5. **கருவூர்ச் சித்தர்:—** இவர் கிரனூரில் வேதியர் குலத்திற் சூரியனருளாற் பிறந்தவர். மெய்ஞ்ஞானம் பெற்றவர், தலந்தோறும் தரிசனம் புரிந்துவருபவர். நெல்லைக்குவந்து கோவிலை வலம்வந்து சந்நிதியில் நைவேதனஞ் செய்யும் சமயம் என்று எண்ணுமல் **"நெல்லையப்பா"** என்று மும்முறை கூப்பிட்டும் பதில் இல்லாததால் **"எருக்கு எழ"** என்று சாபமிட்டு மானூருக்குப் போயினர், சிவபெருமான் சாபங்கேட்டு விடைமீதேறி மானூர் சென்ருர். சித்தர் இறைவனை வணங்கி ஒவ்வொரு வருடமும் ஆவணி மூல நாளில் தமக்குக் காட்சி தரவேண்டுமென்று வரம் பெற்றுக் கொண்டு நெல்லை வந்து **"இங்கு ஈசன் இருக்கின்ருர்"** என்று சொல்லி மானூர் போயுள்ளார். இவர் மானூரில் அற்புதம் நிகழ்த்திக் கொல்லம் 386 ல் காந்திசுரத்தில் முத்தியடைந்தனர் என்பன.

6. **நின்றசீர்நெடுமாறன்:—** இவர் திருஞான சம்பந்தரருளால் சமணசமயத்தினின்றும் சைவ சமயம் புகுந்து சிவபக்தி முதிர்ந்தவராய் நெல்லையில் வந்து தங்கி மனைவி மங்கையர்க்கரசி போற்ற வாழ்ந்தவர். தம் மகன் தம் நண்பர் வேதியர் புதல்வனைப் பெண்ணென்று மறைத்துச்சொல்லிய படியே பெண்ணைக் கண்டவர். இறைவன் திருவருளால் அவ்வேதியர்க்கு வேருேர் ஆண் மகனை யருளிவைத்தவர். வடபுலத்து அரசனை நெல்லை நாதர் பூதப் படைத்துணையால் வென்று **நெல்வேலி வென்ற சீர்நெடுமாறன்** எனத் திருத்தொண்டத் தொகையிற் சுந்தரராற் பாராட்டப் பெற்றிருப்பவர். இக்கோவிலில் மணிமண்டப முதலியன அமைத்துச் சிறப்புச் செய்திருப்பவர். கி. பி. ஏழாம் நூற்றுண்டிலிருந்தவர். இவர் காலத்துக்குப் பின் வந்த பாண்டியர்கள் சாசனங்களே நம் பார்வைக்கு எட்டுவன.

## 6. கல் வெட்டுக்கள்.

கோவிலில் அநேக கல் வெட்டுக்கள் இருக்கின்றன. இவற்றில் மிகப் பழமையானவை சுமார் கி. பி. 950-ல் இருந்த **வீரபாண்டியன்** சாசனங்கள் 5. இவை வட்டெழுத்தில் எழுதப்பட்டவை. அம்பாசமுத்திரம் கல்வெட்டுக்கள் கூறுவதுபோல், இவற்றிலும் பாண்டியன் சோழ மன்னர் தலைகளைக் கைக்கொண்டு வென்றதாகச் சொல்லப்பட்டுள்ளன.

முதலாவது **ராசராசேந்திரன்** (கி. பி. 1011–44) முதலாவது குலோத்துங்கசோழன் (கி. பி. 1074–1118) இவ்விருவர் சாசனங்களினாலும் சோழர்கள் திருநெல்வேலிச் சீமையை வென்றுள்ளமை வெளியாகின்றது.

13-வது நூற்றாண்டில் பாண்டியர் பெருமையை நிலைநிறுத்தியவராகச் சொல்லப்படும் **முதலாவது மாறவர்ம சுந்தரபாண்டியன்** (கி. பி. 1216–35) சாசனங்கள் பலவற்றில், இரண்டினில் தாம் சோழர்களை வென்று நாட்டைப் பாகித்துக் கொண்டதாகவும், **முடிகொண்ட சோழபுரத்தில்** முடிசூடியதாகவும் தெரிவிக்கின்றார். இரண்டாவது மாறவர்ம சுந்தரபாண்டியன் (கி. பி. 1238–51) தம் சாசனத்தில் தம் ஹொய்சாலா நண்பர் வீரசோமேஸ்வர தேவரைக் குறிக்கிறார். முதலாவது ஜடாவர்மசுந்தரபாண்டியன் கர்நாடக காலத்திய மன்னர்கள் வெற்றியைப்பற்றிக் கூறுகிறார். மற்றப் பாண்டிய மன்னர்களில்; கி. பி. 1268 முதல் 1308 வரை விளங்கியவன், முதலாவது மாறவர்ம குலசேகர தேவன். கி. பி. 1314–21-ல் விளங்கியவன். இரண்டாவது மாறவர்ம குலசேகர தேவன். இவர்கள் சாசனங்கள் பல காணப்படுகின்றன.

தென்னிந்தியக் கல்வெட்டு வெளியீடாகத் துரைத்தனத்தார் அச்சிட்டுள்ள சாசனங்கள், அறிவிப்புகள் இவற்றைக் கண்ணுறும் அன்பர் எவரும், இத்தலம் **கீழ்வேம்பு நாட்டுக் குலசேகரச்சதுர்வேதி மங்கலம்** என்று அழைக்கப்படுவதுடன், இறைவன் **திருநெல்வேலி உடையார்** அல்லது **உடையநாயனூர்** என்றும், இறைவி **திருக்காமக்கோட்டமுடைய நாச்சியார்** என்றும் குறிக்கப்படுவதைக் காண்பர். குலசேகர பாண்டியன் என்பவன் கேரள, சோழ, ஹொய்சால மன்னர்களை முறியடித்து வென்று கொண்ட பொருளைக் கொண்டு, சுவாமி கோவில் பெரிய பிரகாரமதிலை அமைத்துள்ளார் என்பது, பாண்டிய மன்னர் தம் பொருளைச் சிவத் திருப்பணியிற் பயன்படுத்துவதிற் பெரும் பற்றுடையவர்கள் என்பதை விளக்குவதாம். மேலும், இக்கோவிலில் பூசை முறைகளுக்கும் அமுதுபடி, சாத்துப்படி, பூ, நந்தவனம், விளக்கு, எண்ணெய், ஆராதனை முதலியவகைகட்கும் அக்காலப் பிரபல பாண்டிய மன்னர்களும், வேள்களும் பிற அன்பர்களும் நிலம் பொருள் முதலியன உதவியிருப்பது சாசனப் பகுதிகளைப் பார்வையிடுவோர் கண்டு மகிழத்தக்கது. இடச் சுருக்கம் பற்றி ஈண்டு விரித்தெழுதப்படவில்லை.

சாசனங்கள் பலவற்றிலும் அவ்வக்கால மன்னர்கள் தங்கள் பெருமையைத் தெரிவித்துக்கொள்வதுடன், **திருநெல்வேலியிலிருந்து** சாசனங்களை வெளிப்படுத்திருப்பதும் விளங்கும். இதிலிருந்து பண்டைக்கால முதல் திருநெல்வேலி எவ்வளவு பிரதானமான நகர் என்பது விளங்குகின்றது.

மதுரை நாயக்க மன்னர் தம் ஆட்சிக் காலத்தும், **திருநெல்வேலி நகரையே** தங்கள் தெற்குப்பிராந்தியங்கட்குத்

தலைநகராகக் கொண்டுள்ளார்கள். இதற்கு 3 மைல் கிழக்கே யுள்ள **பாளையங்கோட்டை** நன்கு பலப்படுத்தப்பட்ட கோட்டை நகராயிருந்தமையால், அதுவே தலைநகர்க்கோட்டை யாகக் கருதப்பட்டு வந்தது. நவாப் ஆட்சிக் காலத்தும், திருநெல்வேலி தலைநகராயிருந்தது. பாளையங்கோட்டை, கோட்டை நகராக நன்கு போற்றப்பட்டு வந்துள்ளது.

## 7. திரு. நெல்லையப்பர் காந்திமதி தேவஸ்தானத்தைச்சார்ந்த கிராமங்கள் நிலங்கள் விபரம்.

இக்கோயிலுக்குச் சொந்தமான அடியிற்கண்ட அயன், இனும் கிராமங்களில் சுமார் *1170* ஏக்கர் நன்செய் நிலமும், சுமார் *6375* ஏக்கர் புன்செய் நிலமும் உள்ளன.

### அயன்

1. திருநெல்வேலிக்கஸ்பா
2. தென்பத்து
3. பாட்டப்பத்து
4. கண்டியப்பேரி
5. அருகன்குளம்
6. சேந்திமங்கலம்
7. மேலப்பாளையம்
8. பல்லிக்கோட்டை
9. தென்குலம்
10. அபிஷேகபட்டி
11. மேகமுடையார்குளம்
12. பிள்ளையார்காடு
13. மணிமூர்த்தீசுரம்
14. பிரான்சேரி
15. தெய்வேந்திரப்பேரி
16. சேர்மாதேவி
17. சுப்பிரமணியபுரம்
18. மாறமங்கலம்

### இனம்

19. செட்டிகுறிச்சி
20. திருப்பணிச்செட்டிகுளம்

21. திருப்பணிக் கரிசற்குளம்
22. ,, நெடுங்குளம்
23. ,, நல்லாண்டார்குளம்
24. ,, நெல்லிபுரம்
25. வடிவாள்புரம்
26. பூவாணி

## வரவு செலவு

1359-ம் பசலி வாஸ்தவ வரவு செலவு கணக்குப்படி ஷை பசலியில் நிலவருமானத்தில் ரூ. 68525–4–7ம் கட்டிட வருமானத்தில் ரூ. 25961—4—10ம், தஸ்திக், மோகினி வருமானத்தில் ரூ. 17418—9—8ம் இதர வருமானங்களும் சேர்த்து மொத்தம் ரூ.130692–3–8

செலவு அயிட்டத்தில், சர்க்கார் நிலவரி, முனிசிபல் கட்டிடவரிகள் ரூ. 9984—1—1ம், ரிசர்வ் வைக்கப்பட்ட தொகை ரூ. 5000/-மும் உள்பட மொத்தம் செலவு ரூ. 81847—6—5

## விழாக்கள் விபரம்.

| | நாள் |
|---|---|
| பிட்டாபுரத்தியம்மன் திருநாள் | 10 |
| விநாயகர் திருநாள் | $5\frac{1}{2}$ |
| மூவர் திருநாள் | $6\frac{1}{2}$ |
| சந்திரசேகரர் திருநாள் | $7\frac{1}{2}$ |
| ஆனிப் பெருந்திருவிழா | 10 |

## ஆனிப் பெருந் திருவிழா

| | |
|---|---|
| ஆனி மகம் மாணிக்கவாசகர் குருபூசை | 1 |
| ஆனி உத்தரம் நடராஜர் அபிஷேகம் | 1 |
| வருஷாபிஷேகம் | 3 |
| ஆடிப்பூரத்திருநாள் | 12 |
| ஆடி அமாவாசை வேணுவனக்குமாரர் அபிஷேகம் | 1 |
| பௌத்திர உற்சவம் | 4 |
| திருவாடிச் சுவாதி-சுந்தரமூர்த்திநாயனர் குருபூசை | 1 |
| வரலெட்சுமி நோன்பு | 1 |
| கிருஷ்ணஷ்டமி (நெல்லைக்கோவிந்தர்) | 1 |
| ஆவணிமூலத்திருநாள் (மானூர் அம்பலம் கருவூர்ச் சித்தர் திருவிளையாடல்) | 12 |
| விநாயகர் சதுர்த்தி | 1 |
| ஆவணி சதுர்த்தசி நடராஜர் அபிஷேகம் | 1 |
| கார்நாள், பிசானநாள் கதிர் | 2 |
| கேதார நோன்பு | 1 |
| நவராத்திரி | 9 |
| சரசுவதி பூசை | 1 |
| விஜய தசமி | 1 |
| புரட்டாசி சதுர்த்தசி நடராஜர் அபிஷேகம் | 1 |
| ஐப்பசி விஷு | 1 |
| ஐப்பசி திருக்கல்யாணத்திருநாள் | 15 |
| தீபாவளி | 1 |
| கந்த சஷ்டி—தேவசேனை திருமணம் ஷை ஊஞ்சல் | 10 |
| திருவனந்தல் | 30 |
| கார்த்திகை சோமவாரம் | 4 |
| குமார சஷ்டி | 6 |
| திருக்கார்த்திகை | 2 |

| | |
|---|---|
| மார்கழித் திருப்பள்ளி எழுச்சி | 30 |
| திருவெம்பாவைத் திருநாள் | 12 |
| மார்கழித் திருவாதிரை ஆருத்ரா தரிசனம் | 1 |
| தைச்சங்கிராந்தி | 1 |
| தைப் பாரிவேட்டை (ராமையன்பட்டி) | 1 |
| தைப் பூசத்திருநாள் | 12 |
| சௌந்தரசபை நடனம் | 1 |
| தை மகம்—தெப்போத்ஸவம் | 1 |
| பத்திர தீபம் அல்லது லட்ச தீபம் | 4, 12 |
| மஹா சிவராத்திரி | 1 |
| அப்பர் தெப்பம், மாசி மகம் | 1 |
| மாசி சதுர்த்தசி, நடராஜர் அபிஷேகம் | 1 |
| சந்திர கிரகணம், சூரிய கிரகணம் | 1 |
| பங்குனி உத்தரத் திருநாள் | 12 |
| பங்குனி உத்தரம் செங்கோல் திருநாள் வள்ளி திருமணம் | 1 |
| சித்திரை விசு—புதுப் பஞ்சாங்கம் வாசித்தல்—அகத்தியர் காட்சி | 1 |
| சித்திரைத் திருவோணம் நடராஜர் அபிஷேகம் | 1 |
| சித்திரைச் சதயம் அப்பர் குருபூசை | 1 |
| சித்திரைப் பரணி சிறுத்தொண்டர் குருபூசை | 1 |
| வசந்தம் திருநாள் | 21 |
| சுவேதகேது திருநாள், வெள்ளி ரதம் | 3 |
| வைகாசி விசாகம் சங்காபிஷேகம் | 3 |
| வைகாசி மூலம் திருஞானசம்பந்தர் | 1 |
| நம்பியாண்டார் நம்பி குருபூசை | 1 |
| சேக்கிழார் குருபூசை | 1 |
| | $284\frac{1}{2}$ நாட்கள் |

### மாத விசேடங்கள்.

| | | |
|---|---|---|
| 1. | பௌர்ணமை | 13 |
| 2. | அமாவாசை | 13 |
| 3. | திருவாதிரை | 13 |
| 4. | விசாகம் | 13 |
| 5. | பிரதோஷம் | 25 |
| 6. | சனிவாரம் | 52 |
| 7. | சங்கிராந்தி | 12 |

## அர்ச்சனை முதலியவற்றின் கட்டண விபரம்.

| விபரம். | அர்ச்சனை டிக்கட். | பட்டர். | சாஸ்திரி |
|---|---|---|---|
| 1. அஷ்டோத்திரம் | 0—0—6 | 0—0—6 | 0—0—6 |
| 2. திரிசதை | 0—1—0 | 0—1—0 | 0—1—0 |
| 3. சகஸ்ரநாமம் | 0—2—0 | 0—2—0 | 0—2—0 |
| 4. தேங்காய் உடைக்க | ... | 0—0—6 | ... |
| 5. நதி ஜலம் மொங்கான் 1-க்கு | | 0—2—0 | |
| டி வண்டி 1-க்கு | | 1—8—0 | |

## 8. தேவஸ்தான நிருவாகப் பகுதி.

டி தேவஸ்தானத்தை சென்னை சர்க்கார் 17-4-40 தேதி P. H./Ms. நிர். 1576 பிரகாரம் நோட்டிபை செய்யப்பட்டு டி தேவஸ்தான எக்ஸிகியூட்டிவ் ஆபீசராக திரு V. **சுந்தரராஜ பிள்ளை**, B A. B L, அவர்கள் 10—4—1948-ம் தேதியிலிருந்து நிர்வாகம் செய்யப்பட்டு வருகிறது.

டி தேவஸ்தானம் மானேஜராக 28-2-1949 முதல் திரு. P. **சங்கரசுப்பிரமணியம்** அவர்கள் பணி ஆற்றிவருகிறார்கள்.

டி தேவஸ்தானத்துக்கு ஆலோசனைக்குழு ஒன்று சென்னை இந்துமத பரிபாலன போர்டாரால் நிருவப்பட்டு கீழ்கண்டவர்கள் கழகத் தலைவர்களாகவும், உறுப்பினர்களாகவும் நியமனம் செய்யப்பட்டு அரும்பணி ஆற்றிவருகிறார்கள்.

1. உயர்திரு. தூத்துக்குடி, A. R. A. S. ஆறுமுகச்சாமி நாடார் அவர்கள் தலைவர்.
2. ,, A. M. கலியாணசுந்தரம் பிள்ளை அவர்கள் மெம்பர்.
3. ,, T. S. உமையொருபாகம் பிள்ளை அவர்கள் ஷை
4. ,, M.V. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் M.A,L.T. ஷை
5. ,, R. குருவையா ரெட்டியார் அவர்கள் B. A. B. L. ஷை
6. ,, S. இராமகிருஷ்ண ரெட்டியார் அவர்கள் M. A. B. L. ஷை
7. ,, K. S. ஆண்டி அவர்கள் ஷை

## 9. திருநெல்வேலியைப்பற்றிப் பாடியும் எழுதியும் உள்ள நூல்கள்.

1. வேணுவன புராணம் — *1914*–ல் மு. ரா. அருணசலக் கவிராயர் பதிப்பித்தது (454 செய்யுள்)

2. திருநெல்வேலித்தல புராணம் — திருநெல்வேலி நெல்லையப்பபிள்ளை பாடியது. *1869*–ல் அச்சிடப்பட்டது.

3. காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் — தச்சநல்லூர், வன்னியப்பபிள்ளை குமாரர் வித்துவான் அழகிய சொக்கநாத பிள்ளையவர்கள் பாடியது.

4. காந்திமதியம்மை கலித்துறை அந்தாதி —— ஷை பிள்ளை பாடியது. அச்சயனூ மகாவித்துவான் சாலிவாடீசுர ஓதுவாமூர்த்தியவர்கள் அச்சிட்டது.

5. நெல்லை வருக்கக் கோவை — வேம்பத்தூர், வித்துவான் அம்பிகாபதி அய்யர் பாடியது. *1914* ல் அச்சிடப்பட்டது.

6. நெல்லைச் சிந்து—நரசிங்கநல்லூர், V. N. காந்திமதிநாதன் செட்டியார் பாடியது. *1915*–ல் அச்சிடப்பட்டது.

7. திருநெல்லைச்சேத்திரக்கும்மி — விழுப்புரம், சின்னமடம், க. சி முருகேச முதலியார் பாடியது. நெல்லையப்பக்கவி ராயர் அவர்களாற்பார்த்து பிரபவஷூ அச்சிடப்பட்டது.

8. திருநெல்லை மும்மணிக்கோவை — கல்லிடைக்குறிச்சி, மகாவித்துவான் சிதம்பரநாதக் கவிராயர் இயற்றியது. பிரபவஷூ அச்சிடப்பட்டது.

9. நெல்லையந்தாதி — ஸ்ரீவில்லிபுத்தூர், வக்கீல் தையல் பாகம் பிள்ளை பாடியது.

10. திருநெல்வேலி ஸ்ரீ காந்திமதி யம்மன் பதிகம் } ஷை

11. ஸ்ரீ தாம்ரபர்ணி மாஹாத்மியம் — ஏ. ஆர். கணபதி சாஸ்திரிகள் மொழிபெயர்த்தது 1905-ல் அச்சிடப்பட்டது.

12. திருநெல்வேலிச் சீமைச் சரித்திரம் — எட்டயபுரம், குருகுஹதாசப் பிள்ளை எழுதியது.

13. சிவஸ்தல மஞ்சரி — டி. முன்சிப் த. சுப்பிரமணிய பிள்ளை எழுதியது

14. திருநெல்வேலித் தல புராணம் வசனம் — மதுரை, ம. அழகர்சாமிப்பிள்ளை எழுதியது. 1910-ல்அச்சிடப்பட்டது

15. திருவிளையாடற் புராணம் — பரஞ்சோதி முனிவர்

16. திருத்தொண்டர் புராணம் — சேக்கிழார் பெருமான்

17. மனோன்மணியம் — P. சுந்தரம் பிள்ளை (பேராசிரியர்)

18. திருநெல்வேலிச் சரித்திரம் — பிஷப் கால்டுவல்

19. Asylum press Almanack & Directory for 1930. (Tinnevelly Dt)

20. திருநெல்வேலிப் பதிகம் — திருஞானசம்பந்த சுவாமிகள்

21. Tinnevelly District Gazeteer.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்த சுவாமிகள்

## திருவாய் மலர்ந்தருளிய

# திருநெல்வேலிப் பதிகம்

### பண்—சாதாரி

1. மருந்தவை மந்திரம் மறுமைநன் னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன் சொரிதரத் துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வே லியுறை செல்வர்தாமே.

2. என்றுமோர் இயல்பினர் எனநினை வரியவர் ஏறதேறிச்
சென்றுதாம் செடிச்சியர் மனைதொறும் பலிகொளும் இயல்பதுவே
துன்றுதண் பொழில்நுழைந் தெழுவிய கேதகைப் போதளைந்து
தென்றல்வந் துலவிய திருநெல்வே லியுறை செல்வர் தாமே.

3. பொறிகிளர் அரவமும் போழிள மதியமுங் கங்கையென்னும்
நெறிபடு குழலியைச் சடைமிசைச் சுலவிவெண் ணீறுபூசிக்
கிறிபட நடந்துநற் கிளிமொழி யவர்மனங் கவர்வர்போலுஞ்
செறிபொழில் தழுவிய திருநெல்வே லியுறை செல்வர் தாமே.

4. காண்டகு மலைமகள் கதிர்நிலா முறுவல்செய் தருளவேயும்
பூண்டநா கம்புறங் காடரங் காநட மாடல்பேணி
ஈண்டுமா மாடங்கள் மாளிகை மீதெழு கொடிமதியந்
தீண்டிவந் துலவிய திருநெல்வே லியுறை செல்வர் தாமே.

5. ஏனவெண் கொம்பொடும் எழில்திகழ் மத்தமும் இளவரவுங்
கூனல்வெண் பிறைதவழ் சடையினர்கொல்புலித் தோலுடையார்
ஆனின்நல் லைந்துதகந் தாடுவர் பாடுவர் அருமறைகள்
தேனில்வண் டமர்பொழில் திருநெல்வே லியுறை செல்வர் தாமே.

6. வெடிதரு தலையினர் வேனல்வெள் ளேற்றினர் விரிசடையர்
பொடியணி மார்பினர் புலியதள் ஆடையர் பொங்கரவர்
வடிவுடை மங்கையோர் பங்கினர் மாதரை மையல்செய்வார்
செடிபடு பொழிலணி திருநெல்வே லியுறை செல்வர் தாமே.

7. அக்குலாம் அரையினர் திரையுலாம் முடியினர் அடிகளன்று
தக்கனார் வேள்வியைச் சாடிய சதுரனார் கதிர்கொள்செம்மை
புக்கதோர் புரிவினர் வரிதரு வண்டுபண் முரலுஞ்சோலைத்
திக்கெலாம் புகழுறுந் திருநெல்வே லியுறை செல்வர் தாமே.

8. முந்திமா விலங்கலன் றெடுத்தவன் முடிகள்தோள் நெரிதரவே
உந்திமா மலரடி யொருவிரல் உகிர்நுதி யாலடர்த்தார்
கந்தமார் தருபொழில் மந்திகள் பாய்தர மதுத்திவலை
சிந்துபூந் துறைகமழ் திருநெல்வே லியுறை செல்வர் தாமே.

9. பைங்கண்வாள் அரவணை யவனொடு பனிமல ரோனுங்காணா
அங்கணா அருளென அவரவர் முறைமுறை யிறைஞ்சநின்றார்
சங்கநான் மறையவர் நிறைதர அரிவையர் ஆடல்பேணத்
திங்கள்நாள் விழமல்கு திருநெல்வே லியுறை செல்வர் தாமே.

10. துவருறு விரிதுகில் ஆடையர் வேடமில் சமணரென்னும்
அவருறு சிறுசொலை யவமென நினையுமெம் அண்ணலார்தாம்
கவருறு கொடிமல்கு மாளிகைச் சூளிகை மயில்கள்ஆலத்
திவருறு மதிதவழ் திருநெல்வே லியுறை செல்வர் தாமே.

11. பெருந்தண்மா மலர்மிசை அயனவன் அனையவர் பேணுகல்வித்
திருந்துமா மறையவர் திருநெல்வே லியுறை செல்வர்தம்மைப்
பொருந்துநீர்த் தடம்மல்கு புகலியுள் ஞானசம் பந்தன்சொன்ன
அருந்தமிழ் மாலைகள் பாடியா டக்கெடும் அருவினையே.

திருச்சிற்றம்பலம்.

# திருநெல்வேலித் தேவாரப்பதிகத்தின் கருத்து.

1. சீர்தரும் புகலிவேந்தர் செய்யவாய் மலர்ந்து கூறும்
பார்தருந் திருநெல்வேலிப்பதிகத்தில் தலபுராணத்
தார்தருங் கதைகளெல்லாம் அடங்குமென் றெம்மனோர்கட்
கேர்தரும் புலமைசான்றோர் இயம்பிய தெடுத்துச்சொல்வாம்.

2. மருந்தவை என்னும் பாட்டின் மன்னிய கடவுள் வாழ்த்தும்
திருந்துபாயிரமும் நாட்டுச்சிறப்பொடு நகர்ச்சிறப்பும்
பொருந்து பஞ்சாக்கரத்தின் புகலருமகிமைதானும்
அருந்தல் நெல்லுக்கு வேலி அமைத்ததும் அடங்குமன்றே.

3. என்றுமோர் என்னும் பாட்டில் இணையிலா மூலலிங்கம்
என்றுமே அழிவிலாமல் இருப்பதும் தருமதேவன்
ஒன்றுமோர் இடபமாகி உற்றதும், தாருகானத்
தொன்றுமோர் கதையுமாமென் றுரைத்தனர் உணர்வின்மிக்கார்.

4. பொறிகிளர் என்னும் பாட்டிற் புகழ்பெறு நாகராசர்
நெறியுடன் தபசுபண்ணி நெடும்பணி யானவாறும்
மறியுடல் திங்கள் பொற்றாமரையினிற் படிந்துசாபம்
அறிவுறத் தீர்ந்தவாறும் அணிகெழு பகீரதன் தான்.

5. கங்கையை யழைப்பான்வேண்டிக் கடுந்தவம் புரிந்தவாறும்
மங்கைபாகனு மக்கங்கை மணிமுடி தரித்தவாறும்
செங்கையிலெடுக்குநீற்றின் சிறப்புறு மகிமைதானுஞ்
சங்கையின் றடங்கு மென்று சாற்றினர் தமிழ்நூல்வல்லோர்.

6. காண்டகென் றுரைக்கும் பாட்டிற் கவின்றிருநடனச்சீரும்
சேண்டரவிளங்குமன்றின் சிறப்புமீரைந்துபேதம்
பூண்டநன்னடனச் சீரும்புரத்தொடு மாலயத்தை
மாண்டகுநெடுமால் காந்திமதி புதுப்பித்தவாறும்.

7. எனவெண்ணென்னும் பாட்டிலெழிலுறுங் காமதேனு
ஊனமில்வரங்கள்பெற்ற வுயர்ச்சியும் பஞ்சகௌவ்யம்
ஆனபாலபிடேகத் தோடந்தணர் சிறுவருக்குத்
தானநாயகனே நல்ல சற்குருவாகி வந்து.

8. அருமறையோதுவித்த வணிபெறுங்கதையும் வேதம்
தருமலி மூங்கிலாகத் தானவதரித்தவாறும்
விரிவறவடங்குமென்ப வெடிதரு வென்னும்பாட்டின்
மருவிய வழுதி வேண்டவளர்ந்த லிங்கத்தின் சீரும்.

9. உலகெலா மீன்ற கன்னி யொருவிளையாட்டை யுன்னி
யலகிலாநந்தச் சோதியணிவிழி புதைத்தவாறும்
விலகிவாளுமிழ் வேதண்ட மேன்மையும் கம்பையாற்றில்
திலகவாணுத லெம்மன்னை சிவனைப் பூசித்தவாறும்.

10. சிந்துபூந்துறை முன்னுன தீர்த்தத்தின் மகிமைதானும்
அந்திலாங் கமையுமென்ப வக்குலா வென்னும்பாட்டில்
வந்த மாணுருத்திராக்க மகிமையும் தக்கனுர்செய்
சந்தமார் வேள்வி முற்றுஞ்சாடிய சதுரப்பாடும்.

11. அன்னவன் மகளாயுற்ற அரும்பழி தொலையவன்னை
மன்னிய விமையத்தூடு வந்தவதரித்தவாறும்
கன்னியிலவளை யெங்கோன் கடிமணம் புரிந்தவாறும்
தன்னிய வடாது பூமிதாழத் தெற்குயர்ந்தகாலை.

12. இன்னவை சமனதாக விருங்கடமுனிவன்றெற்கிற்
பொன்னவிர் பொருநையோடு போந்ததும் அவனுக்கீசன்
மன்னியதல முன்னுன மகிமைகளுரைத்தவாறும்
அன்னவன் வழியில் விந்தமதனெடு கிரவுஞ்சத்தை.

13. அடக்கி வில்வலன்வாதாவி யழிந்திடப்புரிந்தவாறும்
மடக்கொடி பாகன் மேய வளங்கெழுதலங்கள்போற்றிக்
குடக்குறு திருக்குற்றாலக்கோநகரடைந்துமாலைக்
கடக்குறு முனிவன் முக்கட்கடவுளா நினைத்தவாறும்.

14. மின்னிய பொதிகைமேவி வித்தக முனிவன்றாம்ர
பன்னியைப் பிரவாகிக்கப்பண்ணிய பரிசும்செம்பொன்
துன்னுமந்நதியின் மூலந்தொடுத்துச் சங்கமம்வரைக்கும்
மன்னிய தலங்கட்கெல்லாம் மருவிய மகிமைதானும்.

15. இறைவனைந்தொழிலும் அன்னானிறையென வுலகங்காத்த
முறைமையும் மலையவாழ்க்கை முனிவரன்மகிழ்ந்து போற்றக்
கறைகெழுமிடற்றெங்கோமான் கடிமணக்கோலங்காட்டி
நிறையருள் புரிந்துநின்ற நீர்மையும் அடங்குமன்றே.

16. முந்திமாவென்னும் பாட்டின் முளையடிமுளைத்தசோதி
நிந்தையார் நெறியுளாரை நிக்கிரகித்துத்தூய
புந்தியா லுயர்ந்துளாரைப் புகழுறப்புரந்தவாறும்
அந்திநேர லங்கலோதிய ரதகவடிவாளோடு.

17. வரந்தரு சூலமேந்து மாசில்பிட்டாபுரத்தி
யுரந்திகழையனார் மற்றலம் பொருதடந் தோண்மன்னர்
பரந்துறு மரக்கர்தம்மைப் பழித்தொழிலேனையோரை
அரந்தைகளகலவெங்கோ னருளினாற் றொலைத்தவாறும்.

18. பைங்கண்வாளென்னும் பாட்டிற் பைந்துழாய்ப்படலையானும்
செங்கணாலிரண்டுளானும் சிவனடிமுடியுந்தேடி
அங்கண்மா ஞாலங்கீண்டும் அம்பரமீதிற்பாய்ந்தும்
வெங்கணாலளவில் காலம் வெந்துயருழந்தவாறும்.

19. கச்சபாலயமுஞ் சீதைகாதலன் கிட்டினன்பார்
மெச்சுமாதவர்கள் மண்ணில் வேந்தர்களன்பினோடு
நச்சுவாளரவப்பூணு னல்லருள் அடைந்தசீரும்
விச்சைமான் மதியந்தோறும் விழாவணி விளைத்தவாறும்.

20. துவருறுவென்னும் பாட்டிற்றுகளுறுஞ் சமணரோடு
பவருறு பாஞ்சராத்ரம் பழுதற வென்றவாறும்
கவருறு கொடிகள் மன்னுங் கதிர்மணிமாடத்தும்பர்
திவருறு மதியந்தீண்டு சிரபுரப்பிள்ளையார்தாம்.

21. இருமறை நெறிகளோங்க வெழுந்தருளினதும்தீமைப்
பெருமலமொழிக்கவல்ல பெருங்கருமாறித்தீர
மருவியகுமரவேளின் வளர்தரு கதையும்சீர்சா
லருமறைக்குறிய கும்பனரசியல் புரிந்தவாறும்.

22. தொண்டர்கள் நயினர்தங்கள் தூகளறுகதையும்மேவும்
பெண்தரு பாகற் போற்றும் பெருந்தண்மா என்னும் பாட்டில்
அண்டருக்கரிய வெங்கோன் ஆடல்மற்றனைத்தும் தாப
தண்தரு தாருகானத் தாபதா சிறப்பும் அன்னர்

23. பன்னியர் சிறப்பும் கூறும் பான்மையின் நான்மைத்தாகும்
மன்னிய ஆச்ரமத்தின் வரன்முறையாவும் மாதர்க்
குன்னிய கற்பும் அங்கத்தோர் இலக்கணமும் பூமி
தன்னில் அவ்வருண பேதத்தருமமும் அடங்குமன்றே.

"திருநெல்வேலித் தல புராணம்"

## 10. திருநெல்வேலிச் செய்யுட் கோவை.

1. "நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்"

"திருத்தொண்டத் தொகை"

2. கார்த்தண் முகிற்கைக் கடற்கா ழியர்பெரு மாற்கெதிராய்
ஆர்த்த அமணர் அழிந்தது கண்டுமற் றுங்கவரைக்
கூர்த்த கழுவின் நுதிவைத்த பஞ்சவன் என்றுரைக்கும்
வார்த்தை யதுபண்டு நெல்வேலி யில்வென்ற மாறனுக்கே.

"திருத்தொண்டர் திருவந்தாதி"

3. ஆயஅர சளிப்பார்பால் அமர்வேண்டி வந்தேற்ற
சேயபுலத் தெவ்வரெதிர் நெல்வேலிச் செருக்களத்துப்
பாயபடைக் கடல்முடுகும் பரிமாவின் பெருவெள்ளம்
காயுமதக் களிற்றின்நிரை பரப்பிஅமர் கடக்கின்றார்

"நின்றசீர்நெடுமாற நாயனார் புராணம்"

"அங்குறைந்து கண்ணுதலார் அடிசூடி அகன்றுபோய்ப்
பொங்குதமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி"

"திருநாவுக்கரசுநாயனார் புராணம்" 410 செ.

4. நிறவான் முத்தும் வயிரே நிரையும் பொன்னும் விளைபொருநைத்
துறைவாய்ப் பிறவாக் கடவுள் வேய் வயிற்றிற் பிறந்த
தொன்னகரும்.

"திருவிளையாடற்புராணம் அருச்சனைப்படலம்"

எல்லாம் ஆகிய கண்ணுதல் இறைவனும்
பல்லாயிரத் தேவரும் பிறரும்
நிலைபெற நின்ற பனிவரை தலையின்
ஒருதலையாக உருவஞ் சிறிய
குறுமுனி தனியாய் உறுமலை மற்றோர்

தலையாச் சமமாய் நின்றதேல், மலைகளில்
மலையமோ அலதுபொன் வரையோ பெரிது?
சந்து செவிவழித் தந்த கங்கையும்
பின்னொரு வாயசம் கவிழ்த்த பொன்னியும்
வருந்திய தேவரோ டருந்தவர் வேண்ட
அமிழ்திலுஞ் சிறந்த தமிழ்மொழி பிறந்த
மலையம் நின்றிழிந்து விலையுயர் முத்தும்
வேழவெண் மருப்பும் வீசிக் காழகிற்
சந்தன டவியும் சாடி வந்துயர்
குங்குமம் முறித்துச் சங்கினம் அலறும்
தடம்பணை தவழ்ந்து மடமயில் நடம்பயில்
வளம் பொழில் கடந்து குளம்பல நிரப்பி
இருகரை வாரமும் திருமகள் உறையுளாப்
பண்ணும் இப்புண்ணிய தாமிர வர்ணியும்
எண்ணிடில் ஏயும்என் றிசைக்கவும் படுமோ?
இந்நதி வலம்வர இருந்தநந் தொன்னகர்
பொன்னகர் தன்னிலும் பொலிவுறல் கண்டனை

"மனோன்மணியம்" 1 அங்கம்

## காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்.

### வருகைப் பருவம்

வாரா திருந்தால் இனிநான்உன் வடிவேல் விழிக்கு மையெழுதேன்
மதிவாள் நுதற்குத் திலகமிடேன் மணியால்இழைத்த பணிபுனையேன்
போரா தரத்தி னொடுபழக்கம் பேசேன் சிறிதும் முகம்பாரேன்
பிறங்கு முலைப்பால் இனிதூட்டேன் பிரியமுடன்ஒக் கலையில்
வைத்தூத்

தேரார் வீதி வளங்காட்டேன் செய்ய கனிவாய் முத்தமிடேன்
திகழும் மணித்தொட் டிலில்எற்றித் திருக்கண் வளரச் சீராட்டேன்
தாரார் இமவான் தடமார்பில் தவழுங் குழந்தாய்! வருகவே
சாலிப் பதிவாழ் காந்திமதித் தாயே! வருக வருகவே.

## ஊசற் பருவம்.

குருமணிச் சூட்டுரகா வேட்டவரம் ஈந்தும்
குழற்கால்நறும் பொருட் டுக்
கோகனக வாவியிடை நிருவாண மாப்புனல்
குடைந்துளம் வருந்துமட வார்க்
கருள்சுரந் தவர்துகில் அளித்தும் ஒருகங்காள
ராகிமுனி வரர்பன்னி மார்
ஆடைகள் கவர்ந்தும்அடல் இந்திரத் துய்மனுறும்
ஆனையுரு நீத்துநா ளும்
திருவிளக் கிடுவாரொ டேடிய பரத்தைமகிழ்
சீர்பெறச் செய்துமுது நூல்
தேறுநலம் ஆதிசை வச்சிறவர் எய்தத்
தெரித்தும்விளை யாடும்இயல் பில்
பொருவில்வட மலைவில்லி மருவுமர கதவல்லி
பொன்னூசல் ஆடியரு ளே
புகழ்மூங்கில் வனநன்மை திகழ்காந்தி மதியம்மை
பொன்னூசல் ஆடியருளே.

## காந்திமதியம்மை கலித்துறையந்தாதி.

மெட்டுக்கெட் டோம்பொருள் இல்லாமை யால்நெல் விலைகள் எங்கள்
மட்டுக்கெட் டாத படியான தன்றிபும் வாழையிலை
துட்டுக்கெட் டாமது வும்கிடை யாதலைந் தோடியெங்கும்
தட்டுக்கெட் டேங்கின தம்பா சொலவுந் தரமிலையே. 76 செ.

## நெல்லை வருக்கக்கோவை.

### நற்றுயிரங்கல்.

நீட்டிற் குறையுந் திருமேனி யார்நெல்லை நாட்டிலண்ணல்
கூட்டிக் கொடுசெலும் பேதைக்கு யான்கொடும் பாலைபழல்
மூட்டிப் புகையெழு விக்குமென் றேமுன்னை நானிற்செம்பஞ்
சூட்டிக் களித்திருந் தேனைய கோஅவள் உள்ளடிக்கே. 56 செ.

## நெல்லைச் சிந்து.

"செந்தூர் வளர் முருகநாதா என்ற மெட்டு"

செப்புமொரு நாற்றெழுபத் தொன்று பரிவாரகல்
தேவதைகள் கோவில்தனில் உண்டு அதன்
தேசுறவே நாளு நெறி
யோடு நலபூசையது
சேமமுடன் செய்வரன்புகொண்டு அதனுற்றினம்
சீர்கயிலை நாகவளந் துன்றும்.

## நெல்லைச் சேத்திரக் கும்மி.

பொற்று மரையாடும் பெண்களுக் கேமுனம்
புடவை கொடுத்தனர் நஞ்சிவனுர்
உற்றுடி நாமடைவோ மவரால்மிக
உயர்வான பட்டு பீதாம்பரமே. 111 செ.

## திருநெல்லை மும்மணிக்கோவை.

பாங்கா லகம்புறம் தூய்மைசெய் நால்வர்க்குப் பைங்கயிலைப்
பாங்கால வண்டரு வாய்மறை போதஞ்செய் பண்டைநினைப்
பாங்கால வெம்படர் நீண்டார்நெஞ் சேயருட் பார்வைபலிப்
பாங்காலம் வந்தது நெல்லேசன் மெய்ப்புகழ் பன்னுவமே. 29 செ.

## நெல்லையந்தாதி.

அஞ்சக் கரமெனும் ஆயுதத் தாலக மாவயலிற்
பஞ்சப் புலன்களை வெட்டிஅன் பாமுரம் பாங்கமைத்து
விஞ்சத் திருத்திநெல் வேலியில் மேவிய வித்தகனுர்
கஞ்சத் திருப்பத நாற்றினை நாட்டிக் கடிதுய்மினே 55 செ.

## திருநெல்வேலிக் காந்திமதியம்மன் பதிகம்.

ஆணிக் கனகத் தரும்பொ ருளேயென தாவியுடல்
பேணிக் கருதும் பொருளெனு மூன்றும் பிரபலமாய்க்
காணிக்கை யாகத்தந் தேனெனை யாளக் கடனுனக்கு
மாணிக்க மேவளம் வாய்நெல்லைக் காந்தி மதியமையே.

2 செ.



## வேணுவன புராணம்.

### நெல்வேலி நாதர்.

பொன்கொண்ட மலர்அயனும் நெடுமாலும் அமரர்களும் புகழ்ந்து போற்ற
மின்கொண்ட மருங்குமைபாள் இடம்பயில நடம்புரியும் விமல மேலோன்
கொன்கொண்ட ஐங்கரனும் அறுமுகனும் புடைசூழுங் கோமான் எம்மான்
மன்கொண்ட நெல்வேலி நாதன்இரு பாதமலர் மனத்துள் வைப்பாம்.

### காந்திமதி.

ஏர்கொண்ட நெல்லைநகர் இடங்கொண்டு வலங்கொண்டங் கிறைஞ்சு வோர்கள்
சீர்கொண்ட தன்உருவும் பரன்உருவும் விளங்கஅருள் செய்து நாளும்
வேர்கொண்டு வளர்ந்தோங்கும் வேய்ஈன்ற முத்தைதமிக விரும்பிப் பூணும்
வார்கொண்ட களபமுலை வடிவுடைய நாயகிதாள் வணங்கி வாழ்வாம்.

### வாழ்த்து.

பூதி சாதனம் எங்கணும் பொங்குக
சாதி வைதிகம் சைவம் விளங்குக
சோதி வான்மழை தூங்குக வையமேல்
நீதி வேந்தன் நிலைபெற்று வாழ்கவே.

திருச்சிற்றம்பலம்.